ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# புருஷஸூக்த வ்யாக்யானம்

[ ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் வெளியீடு ]

இயற்றியவர்:-

ஸ்ரீ. உ. வே. K. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி

கிடைக்குமிடம்:-

ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,
அட்வகேட்,
3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.

விலை 75 பைசா. தபாற்கூலி 20 பைசா.

ஸ்ரீநிவாஸம் அச்சகம், புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ॥ पुरुषसूक्तम् ॥

## [புருஷஸூக்தம்]

सहस्रशीर्षा पुरुषः। सहस्राक्षस्सहस्रपात्।
स भूमिं विश्वतो वृत्वा। अत्यतिष्ठद्दशाङ्गुलम्॥ १॥

पुरुष एवेदँ सर्वं। यद्भूतं यच्च भव्यम्।
उतामृतत्वस्येशानः। यदन्नेनातिरोहति॥ २॥

एतावानस्य महिमा। अतो ज्यायाँश्च पूरुषः।
पादोऽस्य विश्वाभूतानि। त्रिपादस्यामृतं दिवि॥ ३॥

त्रिपादूर्ध्व उदैत्पुरुषः। पादोऽस्येहाभवात्पुनः।
ततो विष्वङ्व्यक्रामत्। साशनानशने अभि॥ ४॥

तस्माद्विराडजायत। विराजो अधि पूरुषः।
स जातो अत्यरिच्यत। पश्चाद्भूमिमथो पुरः॥ ५॥

यत्पुरुषेण हविषा। देवा यज्ञमतन्वत।
वसन्तो अस्यासीदाज्यं। ग्रीष्म इध्मश्शरद्धविः॥ ६॥

सप्तास्यासन् परिधयः। त्रिस्सप्त समिधः कृताः।
देवा यद्यज्ञं तन्वानाः। अबध्नन् पुरुषं पशुम्॥ ७॥

तं यज्ञं बर्हिषि प्रौक्षन्। पुरुषं जातमग्रतः।
तेन देवा अयजन्त। साध्या ऋषयश्च ये॥ ८॥

तस्माद्यज्ञात्सर्वहुतः। संभृतं पृषदाज्यम्।
पशूँस्ताँश्चक्रे वायव्यान्। आरण्यान् ग्राम्याश्च ये॥९॥

तस्माद्यज्ञात्सर्वहुतः। ऋचस्सामानि जज्ञिरे।
छन्दाँसि जज्ञिरे तस्मात्। यजुस्तस्मादजायत॥१०॥

तस्मादश्वा अजायन्त। एके चोभयादतः।
गावो ह जज्ञिरे तस्मात्। तस्माज्जाता अजा वयः॥११॥

यत्पुरुषं व्यदधुः। कतिधा व्यकल्पयन्।
मुखं किमस्य कौ बाहू। कावूरू पादावुच्येते॥१२॥

ब्राह्मणोऽस्य मुखमासीत्। बाहू राजन्यः कृतः।
ऊरू तदस्य यद्वैश्यः। पद्भ्याँ शूद्रो अजायत॥१३॥

चन्द्रमा मनसो जातः। चक्षोस्सूर्यो अजायत।
मुखादिन्द्रश्चाग्निश्च। प्राणाद्वायुरजायत॥१४॥

नाभ्या आसीदन्तरिक्षं। शीर्ष्णो द्यौस्समवर्तत।
पद्भ्यां भूमिर्दिशः श्रोत्रात्। तथा लोकाँ अकल्पयन्॥१५॥

वेदाहमेतं पुरुषं महान्तं। आदित्यवर्णं तमसस्तु पारे।
सर्वाणि रूपाणि विचित्य धीरः। नामानि कृत्वाऽभिवदन् यदास्ते॥१६॥

धाता पुरस्ताद्यमुदाजहार। शक्रः प्रविद्वान् प्रदिशश्चतस्रः।
तमेवं विद्वानमृत इह भवति। नान्यः पन्था अयनाय विद्यते॥१७॥

यज्ञेन यज्ञमयजन्त देवाः। तानि धर्माणि प्रथमान्यासन्।
ते ह नाकं महिमानस्सचन्ते। यत्र पूर्वे साध्यास्सन्ति देवाः॥१८॥

॥ इति पूर्वानुवाकः॥

## ॥ उत्तरानुवाकः ॥

अद्भ्यस्संभूतः पृथिव्यै रसाच्च। विश्वकर्मणस्समवर्तताऽधि।
तस्य त्वष्टा विदधद्रूपमेति। तत्पुरुषस्य विश्वमाजानमग्रे॥ १॥

वेदाहमेतं पुरुषं महान्तं। आदित्यवर्णं तमसः परस्तात्।
तमेवं विद्वानमृत इह भवति। नान्यः पन्था विद्यतेऽयनाय॥ २॥

प्रजापतिश्चरति गर्भे अन्तः। अजायमानो बहुधा विजायते।
तस्य धीराः परिजानन्ति योनिं। मरीचीनां पदमिच्छन्ति वेधसः॥ ३॥

यो देवेभ्य आतपति। यो देवानां पुरोहितः।
पूर्वो यो देवेभ्यो जातः। नमो रुचाय ब्राह्मये॥ ४॥

रुचं ब्राह्मं जनयन्तः। देवा अग्रे तदब्रुवन्।
यस्त्वैवं ब्राह्मणो विद्यात्। तस्य देवा असन् वशे॥ ५॥

ह्रीश्च ते लक्ष्मीश्च पत्न्यौ। अहोरात्रे पार्श्वे। नक्षत्राणि रूपं।
अश्विनौ व्यात्तं। इष्टं मनिषाण। अमुं मनिषाण। सर्वं मनिषाण॥ ३॥

॥ पुरुषसूक्तम् समाप्तम् ॥

## புருஷஸூக்த வ்யாக்யானம்

புருஷஸூக்தம் ஸுப்ரஸித்தமானது. வேதாந்த விழுப்பொருளின் மேலிருந்த விளக்கை எல்லாருக்கும் நன்கு விளங்கவைப்பது இதுவே. இதன் வைபவம் வாசாமகோசரம். இது புருஷோத்தமனாகிற நாராயணனையே வர்ண்ணிக்கிறது என்று ஸகல ஸ்ம்ருதீதிஹாஸ புராணங்களிலும் சொல்லப்பட்டிருக்கிறது,

"யோநூசாநத்₃விஜம் க₃த்வா ஹதவாந் அர்த்த₂லோப₄த:।
ஸ படே₂த் பௌருஷம் ஸூக்தம் ஜலஸ்த₂: சிந்தயந் ஹரிம்॥"

[எவனொருவன் ஸாங்கமாக வேதாத்யனம் செய்த ப்ராஹ்மணனை அடைந்து, பணப்பேயாட்பட்டு அவனைக் கொன்றானோ, அவன்

ஜலத்தில் நின்றுகொண்டு ஹரியை நினைத்துக்கொண்டு புருஷ ஸூக்தத்தைப் படிக்கக்கடவன்.] என்றும்,

“ஜப்த்வாத₂ பௌருஷம் ஸூக்தம் முச்யதே கு₃ருதல்பக₃:”

[குரு பத்நியுடன் சேர்ந்தவன் புருஷஸூக்தத்தை ஜபித்து, அந்த மஹா பாபத்தினின்றும் விடுபடுகிறான்.] என்றும்,

“ப்₃ரஹ்மயஜ்ஞே த்₃விஜ: ஸூக்தம் பௌருஷம் சிந்தயந் ஹரிம் ।
ஸ ஸர்வாந் ஜபதே வேத₃ாந் ஸாங்கோ₃பாங்க₃ாந் த்₃விஜோத்தம: ॥”

[தினந்தோறும் செய்யவேண்டிய பஞ்சமஹாயஜ்ஞத்தில் ஒன்றான ப்ரஹ்மயஜ்ஞத்தில் ஹரியை நினைத்துக்கொண்டு புருஷஸூக்தத்தைப் படிக்கும் பிராம்மணன் ஸாங்கோபாங்கமான எல்லா வேதங்களையும் ஜபித்தவனாகிறான்.] என்றும் பெரியோர்கள் இதன் பெருமையைப் பேசியிருக்கிறார்கள். சௌநக பகவானும் புருஷ ஸூக்தத்தின் ருக்குகளினால் ஸ்ரீமந் நாராயணனை ஆராதனம் பண்ண வேண்டுமென்று உபதேசித்து, “அர்ச்சிதம் ஸ்யாத் ஜக₃த்₃தம்” என்று அதனால் ஸகலலோகங்களையும் ஆராதனம் செய்யப்பட்டதாகிறது என்றும் வெளியிட்டிருக்கிறார். மேலும், “புருஷ ஸூக்தத்தின் ருக்குகளைக்கொண்டு நெய்யினால் அக்னியில் ஹோமம் செய்பவன் ஸம்ஸாரத்துக்குக் காரணமான பாபங்களை விட்டு மோக்ஷத்தை அடைவான்” என்றும், ஜகத்காரணனாய், திவ்யமங்களவிக்ரஹத்தை உடையவனாய், ஸகல கல்யாணகுண பூர்ணனாய், தேவாதி தேவனாயிருக்கிற ஸ்ரீமந்நாராயணனை, புருஷஸூக்தத்தினால் தியானம் செய்பவன் மோக்ஷத்தையடைந்து, “ஸோச்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்₃ரஹ்மணா விபச்சிதா” [முக்தியடைந்தவன், ஸர்வஜ்ஞனான பரமாத்மாவுடன் கூட அவனுடைய ஸகல கல்யாணகுணங்களையும் அனுபவிக்கிறான்] என்றபடி ப்ரம்மாநந்தத்தை அடைகிறான் என்றும் இதன் மஹிமை விஸ்தாரமாக வெளியிடப்பட்டிருக்கிறது. இன்னும் அநேக ருஷிகள் இதன் பெருமையைப் பரக்கப் பேசியிருக்கிறார்கள். விரிவிற்கஞ்சி விடுத்தோம்.

புருஷஸூக்தத்தின் அர்த்தம் முத்₃க₃லோபனிஷத்திலும், அதில் எடுக்கப்பட்டிருக்கும் புருஷஸம்ஹிதையிலும் நன்கு வெளியிடப்பட்டிருக்கிறது. இந்த உபனிஷத் ருக்வேதத்திலிருப்பதாக ஸ்மார்த்தர்களால் வெளியிடப்பட்டிருக்கிறது. இது நம் பூர்வாசாரியர்களால் மேற்கோளாக எடுக்கப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை. ஆனாலும்,

ஹரிதாஸரால் வெளியிடப்பட்ட "இருசமய விளக்கம்" என்னும் கிரந்தத்தில் எடுக்கப்பட்டிருப்பதால் அதைப் புருஷஸூக்தத்தின் அர்த்தநிர்ணயத்திற்காக ஆங்காங்கு எடுத்துக்காட்டுவோம். இந்தப் புருஷஸூக்தம் பரமாத்மாவாகிற வாஸுதேவனால் இந்திரனுக்கு உபதேசிக்கப்பட்டதாக முத்கலோபனிஷத்தின் இரண்டாவதுகண்டத்தில் காணப்படுகிறது. புருஷஸூக்தத்திற்கு வித்யாரண்யரும் மாத்வரும் பாஷ்யம் செய்திருக்கின்றனர்.

விஷ்ணுபுராணத்தில், துருவன் பரந்தாமனை ஸ்தோத்திரம் செய்யும் ப்ரகரணத்தில், புருஷஸூக்த மந்த்ரங்களை அனுஸரித்து ஸ்தோத்ரம் செய்வதாகக் காணப்படுகிறது. அவ்விடத்தில் ஸகல சாஸ்த்ர பாரங்கதரும், "எங்களாழ்வான்" என்று கீர்த்திபெற்றவருமான ஸ்ரீவிஷ்ணுசித்தாசாரியர் விசேஷமாக வியாக்யானம் செய்திருக்கிறார். அதை அனுஸரித்து நாம் இங்கு வியாக்யானம் செய்கிறோம்.

**1. ஸஹஸ்ரசீர்ஷா புருஷ: ஸஹஸ்ராக்ஷ: ஸஹஸ்ரபாத்**
**ஸ பூ₄மிம் விச்வதோ வ்ருத்வா அத்யதிஷ்ட₂த் த₃சாங்கு₃லம்**

[புருஷனென்று சொல்லப்படும் நாராயணன் அநந்தமான தலைகளையும், எண்ணமுடியாத கண்களையும், அநேகம் கால்களையும் உடையவர். அவர் பூமியை நான்கு புறத்திலும் வியாபித்து அநந்தயோஜனப்ரமாணமான ப்ரம்ஹாண்டத்தை ஆக்ரமித்தார்.]

**"ஸஹஸ்ரசீர்ஷா இத்யத்ர ஸஹஸ்ரோநந்தவாசக:**
**அநந்தயோஜநம் ப்ராஹ த₃சாங்கு₃லவசஸ் தத₂ா**
**தஸ்ய ப்ரதமயா விஷ்ணோர் தே₃சதோ வ்யாப்திருச்யதே"**

["ஸஹஸ்ரசீர்ஷா" என்னுமிடத்தில் ஸஹஸ்ர சப்தம் அநந்தம் என்னும் அர்த்தத்தைச் சொல்லுகிறது. தசாங்குல பதம் அநந்த யோஜனையைச் சொல்லுகிறது. புருஷஸூக்தத்தின் முதல் மந்திரத்தினால் விஷ்ணுவினுடைய ஸர்வதேசவ்யாப்தி சொல்லப்படுகிறது] என்று புருஷ ஸம்ஹிதையில் இந்த முதல் மந்திரத்தின் அர்த்தம் சொல்லப்பட்டது.

(ஸஹஸ்ரசீர்ஷா) கணக்கற்ற தலைகளை உடையவன். இங்கு தலை என்பது எல்லா அங்கங்களையும் காட்டுகிறது. மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஜ்ஞானேந்த்ரியங்கள் ஐந்தையும் உடைத்தாயிருப்பதால் தலை முதலில் எடுக்கப்படுகிறது. இங்கு சீர்ஷசப்தம்

ஜ்ஞானேந்த்ரியங்களால் உண்டாகும் ஜ்ஞானத்தைக் குறிக்கிறது. ப்ராம்ஹணத்தில் ''பே₃ாத₄ந மநந ச்ரவண ஸ்பர்சந த₃ர்சந ரஸந க்₄ராண ஜ்ஞாநாநி ச்ருதாநி ப₄வந்தீத்யத: சிர:'' [அறிதல், நினைத்தல், கேட்பது, ஸ்பர்சம், பார்ப்பது, ருசிப்பது, முகர்வது என்னும் ஞானங்கள் இதனால் அறியப்படுவதால் இது சிரஸ் என்று சொல்லப்படுகிறது] என்று 'சிரஸ்' என்னும் சப்தத்தின் பொருள் சொல்லப் பட்டிருக்கிறதன்றோ. இதனால் அபரிமிதமான அறிவையுடையவன் அநந்தன் என்று அறிவிக்கப்பட்டதாயிற்று. இதையே (ஸஹஸ்ராக்ஷ:) என்று விவரித்திருக்கிறது வேதம். ''ஸர்வேந்த்₃ரியாணாம் நயநம் ப்ரத₄ாநம்'' என்பதினால் கண் எடுக்கப்பட்டது. இவ்விடத்தில் 'கண்' என்னும் பதம் ஐந்து ஜ்ஞானேந்த்ரியங்களையும்காட்டி புருஷோத்தமன் அநந்தமான ஜ்ஞானத்தையுடையவன் என்று விளக்குகிறது. (ஸஹஸ்ரபாத்) அளவற்ற திருவடிகளை உடையவன். இங்கு 'பாத்' என்னும் சப்தம் ஐந்து கர்மேந்த்ரியங்களையும் காட்டுவதன்மூலம் அளவற்ற சக்தியையுடையவன் என்று அச்யுதன் அறிவிக்கிறது. இவ்விரண்டு பதங்களாலும் அளவற்ற ஞானசக்திகளை யுடையவன் பகவான் என்று உரைக்கப்பட்டது.

> ''பராஸ்ய சக்திர் விவிதை₄வ ச்ரூயதே
> ஸ்வாப₄ாவிகீ ஜ்ஞாநப₃லக்ரியாச''

[ஸர்வேச்வரனுடைய சக்தியும், ஜ்ஞானமும், பலமும், செய்கைகளும், ஸ்வாபாவிகமானதாகவும், பலபடிப்பட்டதாகவும், மேலானதாகவும் சொல்லப்படுகிறது.] என்றல்லவோ உபனிஷத் உத்கோஷித்தது.

(ஸஹஸ்ரசீர்ஷா...) இதற்கு வேறு வகையாகவும் பொருள் கொள்ளலாம். ஸகல ப்ராணிகளடங்கிய ப்ரம்மாண்டம் நாராயணனுக்கு சரீரமானதினால் இதற்குள்ளடங்கிய பிராணிகளுடைய தலை, கண், கால் முதலியவை இவனுடையவையே என்னத் தட்டில்லை. இவ்விடத்தில் வித்யாரண்ய பாஷ்யத்திலும் ஸர்வ ப்ராணிகளும் இவருடைய சரீரத்தில் அடங்கினபடியால் அந்த அவயவங்களெல்லாம் இவருடைய அவயவங்களாகும் என்று காணப்படுகிறது ஸகல ப்ராணிகளுடைய அவயவங்களையும் தனக்கு சேஷமாக உடையவன் பகவான் எனப்படுகிறது. அதனாலேயே அவன் ஹ்ருஷீகேசன் (இந்த்ரியங்களை நியமிப்பவன்) எனப்படுகிறான். தலையால் வணங்கப்படவேண்டியவன் அவனே. வாயினால் பேசத்தக்கவனும் அவனே. புத்தியினால் அறியப்படவேண்டியவன் ஹரியே. கண்களால் பார்க்கத்தக்கவனும் அவனே. செவிகளால் கேட்கவேண்டி

யது அவனுடைய கீர்த்திகளையே. (ஸஹஸ்ரபாத்) என்று நம்முடைய கர்மேந்த்ரியங்களும் அவனுடைய கைங்கர்யம் செய்ய ஏற்பட்டவை கள் என்று உணர்த்தப்படுகிறது. இவ்விடத்தில்,

> "வாய் அவனையல்லது வாழ்த்தாது கை உலகம்
> தாயவனையல்லது தாம் தொழா—பேய்முலைநஞ்சு
> ஊணாக உண்டான் உருவோடு பேரல்லால்
> காணா கண் கேளா செவி.

என்ற பாசுரம் அனுஸந்திக்கத்தக்கது. (ஸஹஸ்ரசீர்ஷா) முதலிய பதங்கள் அர்ஜுனனுக்கு விச்வரூபதர்சனத்தின்போது காட்டப் பட்டதுபோன்ற அஸாதாரணமான விக்ரஹத்தை வர்ணிக்கின்றன என்றும் கொள்ளலாம். ஆழ்வாரும் இதையே,

> "தோள்களாயிரத்தாய்! முடிகளாயிரத்தாய்!
> துணைமலர்க் கண்களாயிரத்தாய்! தாள்களாயிரத்தாய்!"

என்று வர்ணித்தாரன்றோ.

(புருஷ:) இதில் சொல்லப்படும் புருஷன் யார்? இது எந்த தெய்வத்தையும் குறிக்கலாமே. புருஷ: என்பது ஸாமாந்யசப்த மல்லவா? என்று சிலர் கேட்கிறார்கள்.

> "ப₄க₃வாநிதி சப்தே₃ாயம் தத₂ா புருஷ இத்யபி ।
> நிருபாதீ₄ ச வர்த்தேதே வாஸுதே₃வே ஸநாதநே ॥
> ஸ ஏவ வாஸுதே₃வோஸௌ ஸாக்ஷாத் புருஷ உச்யதே ।
> ஸ்த்ரீப்ராயமிதரத் ஸர்வம் ஜக₃த் ப்₃ரஹ்மபுரஸ்ஸரம் ॥"

[பகவான், புருஷன் என்னும் இந்த இரு சப்தங்களும் இயற்கை யாகவே ஸநாதனனான வாஸுதேவனைக் குறிக்கின்றன. அந்த வாஸுதேவனே ஸாக்ஷாத் புருஷனாகச் சொல்லப்படுகிறான். பிரம் மாவை முன்னிட்ட மற்ற ஸகல ப்ராணிகளும் ஸ்த்ரீப்ராயர்களே.] என்று பாத்ம புராணத்தில் பேசப்பட்டிருக்கிறது. பகவான், புருஷன் என்னும் இவ்விரு பதங்களும் முக்யமாக நாராயணனையே குறிக்கும். அவன் ஒருவனே புருஷன். மற்றவர்கள் ஸ்த்ரீப்ராயர் களே. ஸ்த்ரீ புருஷனை விட்டால் ஜாரஸ்த்ரீயாவதுபோல் இதர தெய்வங்களைத் தொழும் ஜீவனும் அப்படியே கருதப்படுகிறான். புருஷன் என்றால் ஸகல சேதநாசேதநங்களிலும் வியாபித்து

நிறைந்து நிற்பவன் என்று பொருள். இது நாராயணனுக்கே அஸாதாரணமான குணம். ஸுபாலோபநிஷத்தில் ''ஸஹஸ்ர சீர்ஷா...'' என்னும் மந்த்ரத்தைப் பரமபுருஷனைக் குறித்து ப்ர யோகம் செய்து அவனே ஸர்வபூதாந்தராத்மாவான நாராயணன் என்று நிர்ணயம் செய்திருப்பதால் இந்தப் புருஷ சப்தம் நாரா யணனையே குறிக்கிறது என்பது ஸர்வவேதாந்தப்ரத்யய ந்யாயப்படி ஸித்திக்கிறது. கீதாசார்யனும்,

**''யஸ்மாத் க்ஷரமதீதோஹம் அக்ஷராத$_3$பி சோத்தம:|**
**தஸ்மாத் வேதே$_3$ ச லோகே ச ப்ரதி$_2$த: புருஷோத்தம: ||''**

[ஜ்ஞானத்தில் ஏற்றத்தாழ்வுகளுள்ள ஸம்ஸாரி புருஷனை அதிக்ர மித்தவனுகவும், ஜ்ஞானத்தில் ஸங்கோசவிகாஸமற்றவனை முக் தனைக்காட்டிலும் மேலானவனுகவும் நான் இருப்பதால் லோகத் திலும், வேதத்திலும் புருஷோத்தமன் என்று பிரஸித்தி பெற்றிருக் கிறேன்] என்று கீதையில் அருளிச்செய்திருக்கிருர்.

(ஸ:) இப்படி வேதத்தில் ப்ரஸித்திபெற்றவரான அந்த நாரா யணன். (பூமிம்) ''பூ$_4$மிர் பூ$_4$ம்நா' என்று பூஸூக்தத்தில் சொல்லிய படி பரப்பை உடைத்தாயிருப்பதால் பூமி எனப்படுகிறது. இங்கு பூமி என்பதிஞல் பதிஞலு புவனங்களும் சொல்லப்படுகின்றன. (விச்வதோ வ்ருத்வா...) இப்படிப்பட்ட கீழேழு மேலேழு லோகங் களையும் நான்குபுறமும் வியாபித்து, அவருடைய அங்குலத்தில் பத்து அங்குலம் ப்ரமாணமுள்ள ப்ரஹ்மாண்டத்தை ஆக்ரமித்தார். இந்த ப்ரஹ்மாண்டம் அவருடைய ஸ்வரூபத்தில் ஒரு மூலையில் அடங்கி விட்டது என்று பொருள். (தசாங்குலம்) என்பதற்கு விஷ்ணுசித்தா சாரியர் 'த$_3$சகு$_3$ணம்' என்று பொருள்கூறி மஹாப்ரமாணமான இந்த அண்டம் என்று விளக்கியிருக்கிருர். புருஷஸம்ஹிதையிலும் இந்த அர்த்தமே ஆதரிக்கப்பட்டது. மாத்வர் பிரஹ்மா முதலிய ஜீவர் களுடைய பத்தங்குலம் அளவுடைய ஹ்ருதயகமலத்தில் அந்தர் யாமியாயிருக்கிருர் என்று அர்த்தம் செய்தார். நாபிக்கு மேல் பத்தங் குலத்திற்கு மேற்பட்டிருக்கிற ஹ்ருதயத்தில் வஸிக்கிருர் என்ருர் மஹீதரர். வித்யாரண்யர் பத்து என்பதற்கு அநேகம் என்று பொருள்கொண்டு அண்டத்திற்கு வெளியிலும் வியாபித்திருந்தார் என்று சொல்லியிருக்கிருர்.

''யோயமுக்த: ஸ புருஷ: நாமரூபஜ்ஞாநகோசரம் ஸம்ஸாரிணும் அதிது$_3$ர்ஜ்ஞேயம் விஷயம் விஹாய க்லேசாதி$_3$பி$_4$: ஸங்க்லிஷ்ட-

தே₃வாதி₃ஸஞ்ஜிஹீர்ஷயா ஸஹஸ்ரகலாவயவகல்யாணம் த்₃ருஷ்ட-மாத்ரேண மோக்ஷத₃ம் வேஷம்ஆத₃தே₃.தேந வேஷேண பூ₄ம்யாதி₃ லோகம் வ்யாப்ய அநந்தயோஜநம் அத்யதிஷ்ட₂த்.'' [இங்கு சொல்லப்பட்ட புருஷன் நாமரூபங்களை அறியும் அறிவிற்கு எட்டாததும், ஸம்ஸாரிகளுக்கு மிகவும் அறியமுடியாததுமான பகவத்ஸ்வரூபத்தை விட்டு க்லேசம் முதலியவைகளால் வருந்தும் தேவமநுஷ்யாதிகளைக் காப்பாற்றுவதற்காக ஸஹஸ்ரகலைகளுள்ள அவயவங்களால் அழகாயிருப்பதும்,பார்த்தவுடன் மோக்ஷத்தைத்தருவதுமான வேஷத்தை எடுத்துக்கொண்டார். அந்த வேஷத்துடன் பூம்யாதிலோகங்களை வியாபித்து அநந்தயோஜனமுள்ள அண்டத்தை ஆக்ரமித்தார்.] என்று இந்த முதல் ருக்கின் அர்த்தம் முத்கலோபனிஷத்தில் அழகாக வெளியிடப்பட்டிருக்கிறது.

இதனுல் பரமபுருஷனுக்கு தேசபரிச்சேதம் (தேசத்தினுல் அளவுபட்டிருத்தல்) இல்லை என்று சொல்லப்பட்டது. அங்கும் இங்கும் எங்கும் பரந்துளான் புருஷோத்தமன். இங்கு ஸர்வவ்யாபகத்வத்தைக்கொண்டு இவன் விஷ்ணுவே என்று காட்டப்பட்டது. ''விசதீதி விஷ்ணு:'' என்று எங்கும் நுழைந்திருப்பதால் விஷ்ணு எனப்படுகிருனன்ருே. இவ்விடத்தில் பகவான் ஜ்ஞானம், சக்தி முதலிய கல்யாணகுணங்களை உடையவனென்றும், ஸகலலோகங்களையும் வியாபித்து அவைகளை சரீரமாகக்கொண்டிருக்கிருன் என்றும், அஸாதாரணமான அப்ராக்ருதசரீரத்தை உடையவனென்றும் தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கிறபடியால், ''பூமி பொய்'' என்றும், ''குணமில்லை ரூபமில்லை'' என்றும் சொல்லும் அத்வைதவாதங்கள் அடியோடு அகற்றப்பட்டன.

**2. புருஷ ஏவேத₃ம் ஸர்வம், யத்₃ பூ₄தம் யச்ச ப₄வ்யம்**
**உதாம்ருதத்வஸ்யேசாந:, யத₃ந்நேநாதிரோஹதி.**

[எந்த ஜகத்தானது முன் கல்பத்திலிருந்ததோ, எந்த ஜகத்தானது பின்வரும் கல்பத்தில் உண்டாகப்போகிறதோ, எது இந்தக் கல்பத்திலிருக்கிறதோ, எந்த ஜகத்தானது அந்நத்தினுல் மறையாமலிருக்கிறதோ இந்த ஸமஸ்தமான ஜகத்தும் புருஷனுகிற நாராயணனே. மேலும், மோக்ஷத்துக்கு ப்ரபுவும் ஸ்ரீமந் நாராயணனே.]

**''த்₃விதீயயா சாஸ்ய விஷ்ணே: காலதோ வ்யாப்திருச்யதே''**

[இரண்டாவது மந்த்ரத்தினுல் இந்த விஷ்ணுவுக்கு ஸர்வகாலத்திலும் வ்யாப்தி சொல்லப்பட்டது.] என்று இந்த ருக்கின் அர்த்தம் புருஷஸம்ஹிதையில் ஸங்க்ரஹிக்கப்பட்டது.

(புருஷ......) 'போகின்றகாலங்கள் போயகாலங்கள் போகு காலங்கள்' எனப்படும் மூன்று காலங்களிலும் இருக்கும் வஸ்துக்களெல்லாம் புருஷனே என்று சொல்லப்படுகிறது. 'முன் மந்த்ரத்தில் பரமபுருஷன் எங்கும் வியாபித்திருக்கிருன் என்று சொல்லப்பட்டது. ஆகாசம்போல் வியாபித்திருப்பதுமட்டுமல்ல; எல்லாவற்றையும் சரீரமாகவும் கொண்டிருக்கிருன் பரமாத்மா என்பதை இது காட்டுகிறது.' என்று விஷ்ணுசித்தர் வியாக்யானம் செய்தார். 'இத₃ம் ஸர்வம்' என்றதினுல் புருஷோத்தமனுக்கு வஸ்துபரிச்சே₂தம் (வஸ்துவினுல் அளவுபட்டிருத்தல்) இல்லை என்று காட்டப்பட்டது. அவனில்லாத வஸ்துவே இல்லையன்றே. ''யத்₃பூ₄தம்...ப₄வ்யம்'' என்பதினுல் காலபரிச்சேதமில்லாதவன கேசவன் என்றுகாட்டப்பட்டது. ஆதி₃மத்₄யாந்தரஹிதனன்றே அநந்தன். 'முன் காலத்திலிருந்தான்; இப்பொழுதில்லை.' முதலிய குறைகள் அவனைப்பற்றிச் சொல்ல முடியாது. 'எல்லாம் அவன்' என்பதினுல் 'ஸர்வம் விஷ்ணு மயம் ஜக₃த்' என்று தெரிவிக்கப்படுகிறது. அதனுல் மற்றவைகளில்லை என்று ஏற்படாது. மற்றவைகள் அவனுக்கு சரீரமென்றும், அவைகளுக்கு அவன் அந்தர்யாமி என்றுமே ஏற்படும். சரீரத்திற்குப் பெயரான கிருஷ்ணன், ஸ்ரீநிவாஸன் முதலியவைகள் ஆத்மாவையும் குறிக்கின்றன. அம்மாதிரியே இவ்வுலகத்தையெல்லாம் சரீரமாகக் கொண்ட புருஷனை 'எல்லாம் அவனே' என்று சொல்வது பொருந்தும். 'இந்தக் குடம் கருப்பு' என்று சொன்னுல் 'குடம்' என்று சொல்லப்படும் வஸ்துவும் 'கருப்பு' என்று சொல்லப்படும் வஸ்துவும் ஒன்ருகிவிடுமோ? கருப்பு நிறமானது பிரிக்கமுடியாதபடி குடத்தில் ஒன்றி நிற்கிறது என்றே ஏற்படும். அம்மாதிரியே 'புருஷனே இவ்வுலகம்' என்று சொன்னுல் இவ்வுலகமானது பரமாத்மாவை விட்டுப் பிரிக்கமுடியாதபடி அவனுடன் ஒடுங்கி நிற்கிறது என்றே பொருள்படும். இவ்விஷயத்தை ''அங்பச்ச ராஜங் ஸ பர: தத₂ாங்ய: பஞ்சவிம்சக: தத்ஸ்த₂த்வாத₃நுபச்யந்தி ஹ்யேக ஏவேதி ஸாத₄வ:'' [ராஜனே! பரமாத்மா வேருனவன். இருபத்தைந்தாவது தத்வமான ஜீவன் வேருனவன். அவனுக்குள் அந்தர்யாமியாக இருப்பதால், ஸாதுக்கள் ஒருவனென்றே நினைக்கிருர்கள்-] என்று வ்யாஸரால் மோக்ஷதர்மத்தில் சொல்லப்பட்டது. கீதையில் அர்ஜுனனும் ''ஸர்வம் ஸமாப்நோஷி ததோஸி ஸர்வ:'' [நீ எல்லாவற்றினுள்ளும்

நிறைந்திருப்பதால் எல்லாமாக இருக்கிருய்-] என்று கண்ணனைத் துதித்தான். இங்கும் புருஷோத்தமன் எங்கும் வியாபித்திருக்கிருன் என்று சொன்னபின்பல்லவோ 'புருஷனே எல்லாம்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆழ்வாரும் ''அவனே மற்றெல்லாமும் அறிந்தனமே'' என்றும், ''வருங்காலம் நிகழ்காலம் கழிகால மாய் உலகை ஒருங்காக அளிப்பாய்'' என்றும் பாடியிருக்கிருர். (யத் அந்நேந அதிரோஹதி) 'எந்த உலகமானது அந்நத்திஞல் நசிக்காமலிருக்கிறதோ' என்று அர்த்தம். உலகத்திற்கு ஆஹா ரத்தை அளித்து அவைகளை அழியாமல் 'காக்கும் இயல்வினன் கண்ணபெருமான்'. இங்கு 'அந்நம்' என்பது இந்திரியங்களால் அனுபவிக்கப்படும் விஷயங்களைக் குறிக்கும். தர்மார்த்த காமங்க ளாகிற இஹலோகபுருஷார்த்தங்களைக் கொடுப்பவன் பகவான் என்று சொல்லப்படுகிறது. (உதாம்ருதத்வஸ்ய ஈசாந:) மோக்ஷபுரு ஷார்த்தத்தையும் கொடுப்பவன் பகவானே என்று சொல்லப்படு கிறது. இது பகவானுடைய அஸாதாரணமான லக்ஷணம். இதர புருஷார்த்தங்களைக் கொடுப்பதற்குப் பலதேவதைகளை நாட்டிவைத் திருக்கிருன் நாராயணன். ஆனல் மோக்ஷத்தையும் கொடுப்பவன் முகுந்தனே. 'அம்ருதத்வம் அச்நுதே' என்று வேதங்களில் கோஷிக்கப் பட்ட மோக்ஷத்திற்கு ப்ரபு நாராயணனே. வித்யாரண்யர் ''முக்காலங் களிலும் உள்ள ஜகத் எல்லாம் விராட்புருஷனே. எல்லாக்காலங் களிலுமுள்ள ஸகலப்ராணிகளுடைய தேஹங்களும் விராட்புருஷ னுடைய அவயவங்களே. ப்ரஹ்மா, இந்திரன் முதலியவர்களும் அவரை ஆச்ரயித்தே தங்களுடைய ஸ்தானங்களையடைகிருர்கள்'' என்று அர்த்தம் செய்தார். மேலும், ''தங்கக்கட்டி, குண்டலம் முத லிய ஆபரணமாக ஆனலும், அந்தக் குண்டலம் முதலியவை உண்டா வதற்கு முன்னும் அழிந்ததற்குப்பின்னும் காணப்படாமையால் வாஸ்தவமாகாது. தங்கம் எப்போதும் காணப்படுவதால் உண்மை யானதாகக் கொள்கிறோம். அதுபோல் இந்த உலகமும் முன் இல்லாமலிருந்து இப்போது தோன்றி சில நாளைக்குப்பின் அழிந்து போகிறபடியால் உண்மையல்ல. விராட்புருஷனுடைய ஸ்வரூபம் எப்போதுமிருப்பதால் உண்மையானது. அவரே ஜீவாத்மாக்க ளுடைய புண்யபாபங்களுக்குத் தகுந்தபடி அவர்களுக்குப் பலன் கொடுப்பதற்காகத் தன்னுடைய நிஜஸ்வரூபத்தை விட்டு இந்த ஜகத்ரூபமாய் ஆகியிருக்கிருர்.'' என்றும் சொல்லியிருக்கிருர். இது சரியன்று. உண்டாவதற்கு முன்னும் அழிந்ததற்குப் பின்னும் காணப்படாததால் உலகம் மாறுபாட்டையுடையது என்றும்,

அநித்யமானது (நிலையற்றது) என்றும் ஏற்படுமே யொழியப் பொய்யானது என்று ஏற்படாது. இந்த ருக்கில் 'இதம்' என்று சேதனாசேதனங்களடங்கிய ஜகத்தைக்காட்டுகிறது. புருஷனென்று பரமாத்மா சொல்லப்படுகிறான். ஜகத் பொய்யான வஸ்துவானால் பொய்யான வஸ்துவைப் புருஷன் என்று சொல்லுவது அர்த்தமற்ற பேச்சு. 'இதம்' என்றும், 'புருஷ:' என்றும் தனித்தனியாக எடுக்கப் பட்ட இரண்டும் ஸத்யமானது என்றே ஏற்படும். 'யத் பூதம்......' என்று மூன்று காலங்களும் குறிக்கப்படுவதால் காலம் என்னும் தத்வமும் உண்மையானது என்று உணர்த்தப்படுகிறது. அம்ருதத்வமென்றும் அதற்கு ஈசானனென்றும் இரண்டு சொல்லப்படுகின்றன. அம்ருதத்வம் (மோக்ஷம்) என்று ஒன்றிருந்தால் அதை அடைகிற வஸ்துவும் இருந்தேயாகவேண்டும். ஜகத் பொய்யானால் 'அது அந்நத்தினால் நாசமடையாமலிருக்கிறது' என்பது அஸம்பாவிதம். ஆகையால் இங்கு அத்வைதவாதத்திற்கு அணுவளவும் அவகாசமில்லை. இத்துடன் அத்வைதமஹாரண்யமான வித்யாரண்யருடைய வாதங்களின் கண்டனங்களை இங்கு நிறுத்திக் கொள்ளுகிறோம், இந்த மந்த்ரத்தின் அர்த்தம்

"புருஷோ நாராயண: பூ$_4$தம் ப$_4$வ்யம் ப$_4$விஷ்யச்ச ஆஸீத்
ஸ ஏஷ ஸர்வேஷாம் மோக்ஷத$_3$ச்ச ஆஸீத்"

[புருஷனாகிற நாராயணன் சென்றவைகளும், வருமவைகளும், இருப்பவைகளுமாக ஆனார். அவர் எல்லோருக்கும் மோக்ஷத்தைக் கொடுப்பவராகவும் ஆனார்.] என்று முத்$_3$க$_3$லோபனிஷத்தில் சொல்லப்பட்டது.

3. ஏதாவாந் அஸ்'ய மஹிமா, அதோ ஜ்யாயாம்ச்ச பூருஷ:
பாதோ$_3$ஸ்ய விச்வா பூ$_4$தாநி, த்ரிபாத$_3$ஸ்யாம்ருதம் தி$_3$வி.

[இந்தப் புருஷனுடைய பெருமை இப்பேர்ப்பட்டது. ஆகையால் புருஷோத்தமன் மேலானவன். எல்லா பூதங்களும் இவனுடைய ஒருபாகம். போக்யமாயிருப்பதான மூன்றுபாகம் இவனுடைய பரம பதத்திலிருக்கிறது.]

"ஏதாவாநிதி மந்த்ரேண வைப$_4$வம் கதி$_2$தம் ஹரே:"

['ஏதாவாந்........' என்னும் மந்த்ரத்தினால் ஹரியினுடைய பெருமை பேசப்பட்டது] என்று புருஷஸம்ஹிதையில் சொல்லப்பட்டிருக்கிறது.

(ஏதாவாந்......) இந்தப் புருஷோத்தமன் தேசத்திலும், காலத்திலும், வஸ்துவிலும் அளவிடமுடியாதவன். போக மோக்ஷங்களைத் தருபவன் முகுந்தன். இப்படிப்பட்டது அவனுடைய மஹிமை. ஆகையால் அவனே மேலானவன். (ஏதாவாந் அஸ்ய மஹிமா?...) என்று வைத்துக்கொண்டு "இவ்வளவுதானே அவன் மஹிமை? இதைக்காட்டிலும் மேலானவனன்றோ புருஷன்" என்றும் பொருள்கொள்ளலாம். "ஸோ அங்க$_3$ வேத$_3$ யதி$_3$வா ந வேத$_3$" [(தன் பெருமையை, அவனே அறிவனோ? அறியானோ?] என்றது வேதம். "தனக்கும் தன் தன்மை அறிவரியானை" என்றார் நம்மாழ்வார். "யஸ்யாமதம் தஸ்ய மதம்" [எவன் பரமாத்மாவை அளவிட்டு அறியமுடியாதவனென்று நினைக்கிறானோ அவனே அறிந்தவனாகிறான்.] என்று மறைகள் முறையிட்டன. ஆயிரம் நாவு படைத்த ஆதிசேஷனாலும், 'ஸஹஸ்ரசீர்ஷா' வான எம்பெருமானாலும் அப்பெருமையைப் பேசமுடியாது. எவ்வளவு வர்ணித்தாலும் அதற்கும் மேலானவனாகவே இருப்பான் அநந்தன்.

(பாதோஸ்ய......)இவ்வுலகிலிருப்பவைகளெல்லாம் இவனுடைய ஏகதேசத்தில் அடங்கிவிடுகின்றன.

"யஸ்யாயுதாயுதாம்சாம்சே விச்வசக்திரியம் ஸ்தி$_2$தா"

[எந்தப் பரமாத்மாவினுடைய பல்லாயிரத்தில் ஒரு பாகத்தில் இந்த லீலாவிபூதியானது அடங்கிவிடுகிறதோ.........] என்று பராசரர் விஷ்ணுபுராணத்தில் விளக்கினார். (த்ரிபாத்) அளவற்றதான இந்த லீலாவிபூதியைக்காட்டிலும் பன் மடங்கு அளவற்றது நித்யவிபூதி. இங்கு 'மூன்று' என்பது 'அநந்தம்' என்பதைக் குறிக்கும். இதனாலேயே பரமபதத்தை 'த்ரிபாத்விபூதி' என்கிறோம். (அம்ருதம்) அழியாதது. "நச புநராவர்த்ததே" [மோக்ஷமடைந்தவன் மறுபடி திரும்பிவருவதில்லை.]என்று வேதம் கோஷித்தது. 'புனைக் கொடுக்கிலும் போகலொட்டான்' என்றார் ஆழ்வார். ஏறவிட்டு ஏணி வாங்குபவனன்றோ எம்பெருமான். இந்தப் பரமபதத்திற்கும் அதிலுள்ளார்க்கும் அழிவு கிடையாது.'இனிமையானது'என்றும்பொருள் கொள்ளலாம். "கனியைக் கரும்பினின் சாற்றைக் கட்டியைத் தேனை அமுதை" எனப்படும் ஆராவமுதாகிய அச்யுதனை அனுபவிக்கும் ப்ரதேசமாகையால் "அம்ருதம்" எனப்படுகிறது. "ஸோச்நுதே ஸர்வாந் காமாந்" என்கிறபடி பகவத்குணங்களை அனுபவித்து ப்ரஹ்மானந்தமடையும் இடமன்றோ அது. (திவி) ப்ரகாசிக்கும்படியான பரமபதத்தில் இருக்கிறது.

"அத்யர்காநலதீ₃ப்தம் தத் ஸ்த₂ாநம் விஷ்ணோர் மஹாத்மந:"

[மஹாத்மாவான விஷ்ணுவினுடைய ஸ்தாநமானது ஸூர்யன், அக்னி முதலியவர்களின் ஒளியை அதிக்ரமித்த தேஜஸ்ஸை உடையது.] என்றல்லவோ பாரதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

வித்யாரண்யர் இதற்கு பாஷ்யம் செய்யும்போது மஹிமை என்ருல் ஸாமர்த்யம் என்றும் ஆகையால் இது வாஸ்தவமன்று என்றும் சொல்லியிருக்கிருர். அப்படியென்ருல் இது இந்த்ரஜால மென்றே ஏற்படும். இது ஸாஹஸமேயொழிய வேறல்ல. 'மஹிமை' என்பது பெருமையைக் காட்டுகிறது. "ந தத்ஸமச்ச அப்₁யதி₄கச்ச த்₃ருச்யதே" என்கிறபடி ஒப்பாரும் மிக்காருமற்றவன் மாதவன் என்றே பொருள்படும். அவனைவிடத் தாழ்ந்த வஸ்துக்களில்லாவிடில் பெருமையே ஏற்படாது. பெருமையென்று சொன்னுலும் கேலிக் கூத்தாகும். பெருமையும் சிறுமையும் ஒன்றையொன்று அபேக்ஷித்திருக்கும் வார்த்தைகளன்ருே. மேலும், பகவான் உபயவிபூதி நாயகன் என்று சொல்லப்பட்டபடியால் அத்வைத வாதத்திற்குச் சிறிதும் இங்கு இடமில்லை.

"ஸச ஸர்வஸ்மாந்மஹிம்நோ ஜ்யாயாந்,
தஸ்மாந்ந கோபி ஜ்யாயாந்"

[அவன் எல்லா மஹிமைகளைக்காட்டிலும் உயர்ந்தவன். அவனைக் காட்டிலும் உயர்ந்தவனில்லை.] என்று முத்கலோபனிஷத்தில் இந்த மந்திரத்தின் பொருள் உரைக்கப்பட்டது.

**4. த்ரிபாதூ₃ர்த்₄வ உதை₃த் புருஷ; பாதே₃ாஸ்யேஹாப₄வாத்புந:
தேதா விஷ்வங் வ்யக்ராமத் ஸாசநாநசநே அபி₄.**

[பரமபதத்திலிருக்கும் பரமபுருஷன் மூன்று அவதாரத்தை உடையவனுகி ஸங்கல்பித்தார். இவருடைய ஒரு அவதாரமான (அநிருத்தன்) இவ்வுலகத்தில் அவதரித்தார். அதற்குப்பின் எல்லாப்பக்கத்திலும் ஜீவன் ஜடம் இவர்களைக் குறித்து (அவதாரம் செய்வதன் மூலம்) வியாபித்தார்.]

"த்ரிபாதி₃த்யநயா ப்ரோக்தம் அநிருத்₃த₄ஸ்ய வைப₄வம்"

['த்ரிபாத்...' என்னும் மந்த்ரத்தில் அநிருத்த நாராயணனுடைய வைபவம் விளக்கப்படுகிறது.] என்று புருஷஸம்ஹிதை சொல்லிற்று.

(த்ரிபாத்......) பரமபதத்திலிருக்கும் பரவாஸுதேவன் ஸங்கர்ஷணன், அநிருத்தன், ப்ரத்யும்நன் என்னும் மூன்று வ்யூஹங்களை உடையவராயிருக்கிறார். இந்த வ்யூஹங்களைப்பற்றிப் பாஞ்சராத்ரத்தில் அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையில் விசேஷமாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. (உதைத்) 'இவ்வுலகையெல்லாம் ரக்ஷிக்கக்கடவேன்' என்று ஸங்கல்பித்தார். (அஸ்ய பாத:) இவருடைய ஒரு அவதாரமான அநிருத்தன். (இஹ அபவாத்புந:) மறுபடியும் இங்கு விஷ்ணுவாகத் திருப்பாற்கடலில் அவதரித்தார். (ததோ...வ்யக்ராமத்) அதன் பிறகு அயோத்தி த்வாரகை முதலிய திவ்யநகரங்களில் ராமக்ருஷ்ணாதிகளாக அவதரித்தார். அவைகளுக்கும் பிற்பாடரானவர்களை உய்விப்பதற்காகத் திருவரங்கம், திருப்பதி முதலிய திவ்யதேசங்களிலும், கிராமங்கள்தோறும், பக்தர்களுடைய கிருஹங்கள்தோறும் அர்ச்சாமூர்த்தியாக அவதரித்தார். 'விஷ்வக்' என்றதால் எண்ணிறந்த இடங்களில் அவதாரம் செய்திருப்பது தோற்றுகிறது. ஸ்வரூபவ்யாப்தி முதல் மந்த்ரத்திலேயே சொல்லப்பட்டதால் இங்கு 'வ்யக்ராமத்' என்பதற்கு அவதாரம்செய்து வியாபித்தார் என்றே பொருள்கொள்ளவேண்டும். இவர் எதற்காக இப்படி அவதாரம் செய்யவேண்டும் எனில்: (ஸாசநாநசநே அபி) உணவருந்துபவர்களான தேவர், மனுஷ்யர் முதலியவர்களையும், உணவருந்தாமல் பாறை முதலியவையாய்க்கிடக்கும் சேதனர்களையும் உய்விப்பதற்கே இப்படிப் படாதனபடுகிறான் பரமபுருஷன் என்று சொல்லப்படுகிறது. "உயிரளிப்பான் எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்! இமையோர் தலைவா!" என்றார் ஆழ்வார். "அஜாயமானோ ப₃ஹுதா₄ விஜாயதே" [பிறப்பிலியான பகவான் பலதடவை பிறக்கிறான்] என்றது வேதம். 'புற்பா முதலாப் புல்லெறும்பாதி ஒன்றின்றியே' நல்ல கதிக்கு அழைத்துச் செல்லவன்றோ அவதாரம் செய்கிறான் அச்யுதன். சேதநாசேதநங்களெல்லாம் அவனுடைய உடைமைகளாயிற்றே. உடைமையைப்பற்றிய கவலை உடையவனுக்கல்லவோ உண்டு. விபவாவதாரங்களைப்பற்றி ராமாயணம், பாரதம், பாகவதம் முதலியவைகளில் விஸ்தாரமாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. அர்ச்சாவதாரமாஹாத்ம்யங்கள் பாஞ்சராத்ரவைகானஸ ஸம்ஹிதைகளிலும், வாராஹம், ப்ரஹ்மாண்டம் முதலிய புராணங்களிலும் கீர்த்திக்கப்பட்டிருக்கின்றன. ஆழ்வார்கள் அருளிச்செயல்களிலும் அனுபவிக்கிறோம்.

இப்படி அவதாரம் செய்தது ஸ்ரீமந் நாராயணனே. வேறு தெய்வங்களல்ல. "பரித்ராணாய ஸாதூ₄நாம்" என்கிறபடி லோக

ஸம்ரக்ஷணத்திற்காகப் பல பிறப்புகளெடுத்திருக்கிருன் பரந்தாமன். உலகத்தைக் காப்பதற்காக மற்ற தெய்வங்கள் அவதாரம் செய்த தில்லை. அவர்கள் அவதாரம் செய்ததாகச் சொல்லுவதும் அல்ப காரியங்களுக்கே. தாயில்லாப்பெண் ப்ரஸவவேதனைப்படும்போது தாயும் ஆகி 'தாயுமானவர்' என்று பெயர் பெற்றதாகச் சொல்லு கிருர்கள். இப்படிச் சில விருத்தாந்தங்கள் சொல்லப்படுகின்றன. அவதாரங்கள் செய்து மஹத்தான கீர்த்தியடைந்தவன் மாதவனே. வியூஹங்கள் தேவர்களுக்குக் கூப்பீடு கேட்குமிடங்கள். நம்மால் அணுகமுடியாதவை. விபவாவதாரங்களோ அக்காலத்திலிருந்த பாக்யவான்களுக்கே. "புல்லாய்ச் சிலையாய்க் கிடந்திலமே கழல் தீண்டுகைக்கே" என்றே நாம் நினைக்கவேண்டியிருக்கிறது. அவைகளைப்பற்றி இதிஹாஸ புராணங்களில் கேட்டே ஆநந்த மடைகிறோம். அவை ஒருகாலத்திலோடும் பெருக்காறு போன்றவை. அவற்றில் தேங்கின மடுப்போலே சொல்லப்பட்ட அர்ச்சாவதாரமும் வற்றிவிட்டதோ என்று தோன்றுகிறது. அவைகட்கு யாதொரு தீங் கும் ஏற்படாதென்று மனோரதித்திருந்தோம். அவைகளும் ஸமாப்தி யடைந்தனவோ என்றேங்கும்படி இருக்கிறது இப்போதிருக்கும் நிலைமை. கூரத்தாழ்வானையும் பட்டரையும்போல், கல்கிஅவதாரத்தை இப்போதே எடுத்துச் சீர்திருத்தும்படி பிரார்த்திப்பதைத்தவிர வேறு வழியில்லை.

5. தஸ்மாத்₃ விராட₃ஜாயத விராஜோ அதி₄பூருஷ:
ஸ ஜாதோ அத்யரிச்யத பச்சாத் பூ₄மிமதே₂ா புர:

[அந்த விஷ்ணுவிடமிருந்து ப்ரஹ்மாண்டம் உண்டாயிற்று. ப்ரஹ் மாண்டத்தில் பிரமன் உண்டானுன். அந்த நான்முகன் பூமியைப் பக்கங்களிலும், கீழும், மேலும் ஆக்ரமித்தனன்.]

"தஸ்மாத்₃ விராடி₃த்யநயா பாத₃நாராயணாத் ஹரே:
ப்ரக்ருதே: புருஷஸ்யாபி ஸமுத்பத்தி: ப்ரத₃ர்சிதா"

[('தஸ்மாத் விராட்...' என்னும் மந்த்ரத்தினுல் நாராயணனுடைய ஓர் அவதாரமான ஹரியினிடமிருந்து ப்ரக்ருதியினுடையவும், பிரம னுடையவும் உத்பத்தியானது காட்டப்பட்டது.] என்று புருஷஸம் ஹிதையில் இதன் பொருள் உரைக்கப்பட்டது. (தஸ்மாத்...) இப் படிப் பலவிதமான அவதாரங்களைச் செய்த மஹாவிஷ்ணுவிட மிருந்து முட்டை வடிவமான ஒரு அண்டம் உண்டாயிற்று.

"அயம் லோகஸ்து வை ஸம்ராட் அந்தரிக்ஷம் விராட் ஸ்ம்ருதம்"

[இந்த லோகம் ஸம்ராட் என்றும், அந்தரிக்ஷம் விராட் என்றும் சொல்லப்படும்.] என்று வாயுபுராணத்தில் 'விராட்' என்பது அந்தரிக்ஷத்தை மட்டும் குறிப்பதாகச் சொல்லப்பட்டாலும் இங்கு எல்லா லோகங்களுமடங்கிய ப்ரஹ்மாண்டத்தையே குறிப்பதாகக் கொள்ளலாம். (விராஜோ...) அந்த அண்டத்தை ஆச்ரயித்து பிரமன் உண்டானுன். அண்டத்திற்கு அதிகாரிபுருஷனுகிற பிரமன் உண்டானுன் என்றும் பொருள்கொள்ளலாம். ஸுபாலோபனிஷத்தில் 'அண்டம் ஸமப₄வத்' [அண்டம் உண்டாயிற்று.] என்றும், 'மத்₄யே புருஷ:' [மத்தியில் பிரமனுகிற புருஷன் உண்டானுன்.] என்றும் இவ்விஷயமே சொல்லப்பட்டபடியால் இப்படி ஸ்ருஷ்டித்தவன் நாராயணனே என்று அறிகிறோம். இதிலிருந்து அண்டஸ்ருஷ்டி, அனுதி புருஷனும், அகாரவாச்யனுமான அநந்தனுடையதே என்று அறிவிக்கப்படுகிறது. இப்படி உண்டாக்கப்படும் அண்டங்கள் ஒன்றிரண்டல்ல. ப்ரஹ்மாக்களும் அப்படியே. இதையே பெரியாழ்வாரும் 'அண்டக்குலத்துக்கதிபதியாகி' என்ருர். பிரமன் தன்னைத்தான் ஸ்ருஷ்டிக்கவுமில்லை. தான் இருக்குமிடத்தை ஸ்ருஷ்டிக்கவுமில்லை. அண்டஸ்ருஷ்டி அவனுடைய சக்திக்கு மீறினது. ப்ரஜாஸ்ருஷ்டியே அவன் வல்லமைக்குட்பட்டது. அதுவும் அச்யுதனுடைய அருளினுலும், நியமனத்தினுலும் ஏற்படுவது. அப்படி ப்ரஜாஸ்ருஷ்டி பண்ணின காலத்தில் ப்ரஜைகள் 'இட்டகால் இட்டகைகளாய்' செயலற்று இருந்தன. பிறகு பிரமன் மாதவனிடம் முறையிட்டதாகவும், அவன் ஸர்வேந்த்ரியங்களிலும் வியாபித்து அவைகளுக்குக் கார்யம் செய்ய சக்தி கொடுத்ததாகவும் அறிகிறோம். முற்கூறிய பல உபனிஷத்துக்களிலும் சொல்லப்பட்ட நாராயணனே இப்படி ஸர்வவிதத்திலும் ஸ்ருஷ்டி செய்கிருன் என்று ஏற்படுகிறது. (ஸ ஜாதோ...) அந்தப் பிரமன் பூமியை, நான்கு பக்கங்களிலும், கீழும், மேலும் வியாபித்ததாகச் சொல்லப்படுகிறது. 'பச்சாத்' என்றதனுல் எல்லா த்வீபங்களிலும், 'அத₂:' என்பதால் பாதாளத்திலும், 'புர:' என்பதினுல் ஸ்வர்க்கம் முதலியவைகளிலும் வியாபித்தான் என்று ஏற்படுகிறது. பிரமனுடைய ஸ்வரூபம் அணுவானபடியால் ஸ்வரூபத்தினுல் இவைகளை வியாபிக்க முடியாது. ஆகையால் ஞானம், சக்தி முதலிய குணங்களால் வியாபித்ததாகவே கொள்ள வேண்டும். தன்னுடைய ஞானத்தினுல் பதினுலு உலகங்களிலும் நடக்கவேண்டியவைகளை அறிந்து, சக்தியினுல் ஸ்ருஷ்டிசெய்வதால்

இவ்வண்டத்திலுள்ள எல்லா உலகங்களிலும் ஞானத்திறுலும், சக்தியினுலும் வியாபித்தான் என்றே கொள்ளவேண்டும். ஸ்ரீவிஷ்ணுசித்தர் 'தன்னுடைய பிரஜைகள் மூலமாக வியாபித்தான்' என்றும் பொருள்கொண்டார். பெரிய சரீரத்திறுல் வியாபித்த தாகவும் சொல்லலாம்.

"ஸ ச பாத₃நாராயண: ஜக₃த் ஸ்ரஷ்டும் ப்ரக்ருதிம் அஜநயத்"

[நாராயணனின் அவதாரமாகிய அந்த விஷ்ணு உலகை ஸ்ருஷ்டிப் பதற்காகப் பிரமனை ஸ்ருஷ்டித்தார்.] என்று இந்த மந்திரத்தின் பொருள் முத்கலோபனிஷத்தில் உரைக்கப்பட்டது. இங்கு 'ப்ரக்ருதி' சப்தம் ப்ரஜைகளுக்குக் காரணபூதனுன பிரமனைக் குறிக்கிறது.

6. யத்புருஷேண ஹவிஷா, தே₃வா யஜ்ஞமதந்வத
வஸந்தோஸ்யாஸீத₃ாஜ்யம், க்₃ரீஷ்ம இத்₄மச்ஶரத்₃த₄வி:

[தேவர்கள் (நித்யஸூரிகள்) சதுர்முகனுகிற ஹவிஸ்ஸினுல் ஸ்ருஷ்டியைக்குறித்துச் செய்த (தியானரூபமான) யாகத்திற்கு வஸந்தருது நெய்யாகவும், க்ரீஷ்மருது ஸமித்தாகவும், சரத்ருது புரோடாசமென்னும் ஹவிஸ்ஸாகவும் ஆயிற்று.]

"யத் புருஷேணேத்யநயா ஸ்ருஷ்டியஜ்ஞஸ் ஸமீரித:"

['யத் புருஷேண' என்னும் மந்த்ரத்திறுல் ஸ்ருஷ்டிக்காகச் செய்யப்பட்ட யஜ்ஞம் சொல்லப்பட்டது.] என்று புருஷஸம் ஹிதை சொல்லிற்று.

இந்த மந்த்ரத்திலிருந்து ஸ்ருஷ்டியைக் குறித்து யஜ்ஞம் செய்யப் பட்ட விஷயம் விவரிக்கப்படுகிறது. பிரமனுக்குப் பிறந்தபோதே ஸ்ருஷ்டிசக்தியில்லை என்பது இதிலிருந்து ஏற்படுகிறது. நான் முகனுக்குப் படைக்கும் சக்தி உண்டாவதற்காக எம்பெருமானைக் குறித்து யஜ்ஞம் செய்தார்கள் என்றும் ஏற்படுகிறது. (யத் புரு ஷேண...) இந்தப் பிரமனுகிற புருஷனை அந்த யஜ்ஞத்தில் ஹோமம் செய்யப்படும் பசுவாகக் (ஹவிஸ்ஸாக) கல்பித்தனர் என்று ஏற்படு கிறது. யார் கல்பித்தார்கள்? (தேவா:) தேவர்கள். யார் அந்த தேவதைகள்? என்னும் விசாரணை உண்டாகிறது. இந்த்ராதிதேவர் களோவெனில் ஸ்ருஷ்டிசக்தியை அடைந்த பின்பு பிரமனுல் படைக் கப்பட்ட கச்யபப்ரஜாபதிக்கு அதிதியிடம் பிறந்த புத்திரர்கள். ஆகை யால் இங்கு சொல்லப்பட்ட தேவர்கள் அவர்களாக இருக்கமுடியாது. ஆகையால் பிரகாசிக்கும்படியானதும் பரமாகாசமென்று புகழ் பெற்

றதுமான ஸ்ரீவைகுண்டத்திலிருக்கும் நித்யஸூரிகளே இங்கு சொல்லப்படும் தேவர்கள் என்று கொள்ளவேண்டும். (யத் யஜ்ஞம் அதந்வத அஸ்ய) பிரமனைப் பசுவாகக்கொண்டு எந்த தியானரூபமான யஜ்ஞத்தைச் செய்தார்களோ அந்த யஜ்ஞத்திற்கு. (வஸந்த: ஆஜ்யம் ஆஸீத்...) வஸந்தருதுவானது நெய்யாகவும், க்ரீஷ்மருது ஸமித்தாகவும், சரத்ருது புரோடாசம் எனப்படும் ஹவிஸ்ஸாகவும் ஆயிற்று. இந்த யஜ்ஞம் பரமபுருஷனைக் குறித்து ஸ்ருஷ்டிக்காகச் செய்யப்பட்ட தியானரூபமான யஜ்ஞமாகும். ஸ்ருஷ்டிக்குக் காலம் அவசியமாக வேண்டியபடியால் அது இம்மாதிரி உபகரணங்களாகச் சொல்லப்பட்டிருக்கிறது. 'புருஷேண ஹவிஷா' என்கிற இடத்தில் பிரமன் யாகபசுவாகிற ஹவிஸ் ஆகிறான் என்று சொல்லப்பட்டது. 'சரத் ஹவி:' என்ற இடத்தில் சரத்காலம் புரோடாசம் எனப்படும் ஹவிஸ் ஆகிறது என்று சொல்லப்படுகிறது. அரிசியின் மாவினால் செய்யப்பட்டு ஹோமம் பண்ணப்படுகிற அடை புரோடாசம் எனப்படும். நித்யஸூரிகள் பிரஹ்மாவை ஸ்ருஷ்டிக்கு முக்யமான உபகரணமாகவும் காலத்தை ஸஹகாரியாகவும்கொண்டு ப்ரஜாஸ்ருஷ்டிக்காக பகவானை தியானித்தார்கள் என்று இதன் பொருள். அப்படி அவர்கள் செய்ததற்குக் காரணம் பகவந்நியமனமே என்று நாம் ஊஹிக்க வேண்டியிருக்கிறது.

இங்கு சொல்லப்பட்டிருக்கிற ஸ்ருஷ்டி 'ப₃ஹு ஸ்யாம் ப்ரஜாயேய' [நான் பலவாக ஆகக்கடவேன்.] என்ற ஸங்கல்பத்துடன் நிமித்தோபாதானகாரணமான நாராயணனால் செய்யப்படும் ஸமஷ்டி ஸ்ருஷ்டியல்ல. இது வ்யஷ்டி ஸ்ருஷ்டி எனப்படும் ப்ரஜாஸ்ருஷ்டியே. இம் இம்மாதிரியான சக்தி நித்யர்களுக்கு உண்டென்பதற்குப் பல ஆதாரங்களிருக்கின்றன. விஷ்வக்ஸேனருடைய மந்த்ரத்தில் "விச்வஸ்ருஜே" [உலகத்தை ஸ்ருஷ்டிப்பவருக்கு] என்று சொல்லப்பட்டிருக்கிறது. நாரதீயமென்று ப்ரஸித்தமான ஹரிபக்திஸுதோதயத்தில் ஐந்தாவது அத்யாயத்தில் "தே ஹி குர்யுர் யதீ₃ச்ச₂ந்தி ஜக₃த்ஸர்க₃லயௌ ஸ்வயம்" [நித்யஸூரிகள் விரும்பினார்களாகில் ஜகத்ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களைத் தாமே செய்வார்கள்.] என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆளவந்தார் "த்வயா நிஸ்ருஷ்டாத்மப₄ரேண" [உன்னால் வைக்கப்பட்ட உபயவிபூதி நிர்வாஹபாரத்தையுடைய (விஷ்வக்ஸேனரால்)] என்று பகவானை ஸ்தோத்ரம் செய்திருக்கிறார். ஸ்ரீராமானுஜர்,

"ஸ்வஸங்கல்பமாத்ராவக்லுப்த ஜகஜ்ஜந்மஸ்தி₂தித்₄வம்ஸாதி₃கே
ஸ்ரீமதி விஷ்வக்ஸேநே ந்யஸ்தஸமஸ்தாத்மைச்வர்யம்"

[தன்னுடைய ஸங்கல்பத்தால் கொடுக்கப்பட்ட ஜகத்ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களையுடைய ஸ்ரீவிஷ்வக்ஸேனரிடம் வைக்கப்பட்ட தன்னுடைய எல்லா ஐச்வர்யங்களையும் உடையவனை] என்று ஸ்ரீவைகுண்டகத்யத்தில் அருளிச்செய்திருக்கிறார். பிரமனாகிற ஜீவனுக்கு இச்சக்தியிருக்கும்போது அவரைக்காட்டிலும் பல்லாயிரம் மடங்கு பெரியவர்களான நித்யர்களுக்கு இச்சக்தியிருப்பது அதிசயமல்ல. இந்த யாகத்தினால் பிரமனுக்கு ஸ்ருஷ்டிசெய்யும் சக்தி கிடைக்கிறதென்றும், அந்தப்பிரமனை நிமித்தமாத்ரமாகக்கொண்டு அவர் மூலமாக நித்யஸூரிகள் ஸ்ருஷ்டி செய்விக்கிறார்களென்றும் ஏற்படுகிறது. முத்கலோபனிஷத்தில் இதன் பொருள் வேறு வகையாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

"ஸ ஸம்ருத்$_3$த$_4$காயஸ் ஸந் ஸ்ருஷ்டிகர்ம ந ஜஜ்ஞிவாந். ஸ: அநிருத்$_3$த$_4$ நாராயண: தஸ்மை ஸ்ருஷ்டிம் உபாதி$_3$சத்:–'ப்$_3$ரஹ்மந் தவ இந்த்$_3$ரியாணி யாஜகாநி த்$_4$யாத்வா கோசபூ$_4$தம் த்$_3$ருட$_4$க்$_3$ரந்தி$_2$ம் கலேவரம் ஹவிர் த்$_4$யாத்வாமாம் ஹவிர்பு$_4$ஜம் த்$_4$யாத்வா வஸந்தகாலம் ஆஜ்யம் த்$_4$யாத்வா க்$_3$ரீஷ்மம்இத்$_3$மம் த்$_4$யாத்வா சரத்$_3$ருதும் ரஸம் த்$_4$யாத்வா ஏவம் அக்$_3$நௌ ஹுத்வா அங்க$_3$ஸ்பர்சாத் கலேவர: வஜ்ரம் ஹீஷ்யதே. தத: ஸ்வகார்யாந் ஸர்வ ப்ராணிஜீவாந் ஸ்ருஷ்ட்வா பச்வாத்$_3$யா: ப்ராது$_3$ர்ப$_4$விஷ்யந்தி, தத: ஸ்த$_2$ாவரஜங்க$_3$மாத்மகம் ஜக$_3$த் ப$_4$விஷ்யதி"

[பெரிய தேகத்தை உடையவரான அப்பிரமன் ஸ்ருஷ்டியை அறியவில்லை. அந்த அநிருத்த நாராயணன் அவருக்கு ஸ்ருஷ்டியை உபதேசித்தார்:— 'பிரமனே! உன்னுடைய இந்திரியங்களை யாகம் செய்பவர்களாகவும், சரீரத்தை ஹவிஸ்ஸாகவும், என்னை அந்த ஹவிஸ்ஸை உண்பவனாகவும், வஸந்தகாலத்தை நெய்யாகவும், க்ரீஷ்மருதுவை ஸமித்தாகவும், சரத்ருதுவை (ஹோமம் செய்யப்படும்) ஷட்ரஸமாகவும் தியானித்து, இம்மாதிரியாக அக்னியில் ஹோமம் செய்து, அதன் ஸ்பர்சத்தினால் (உன்னுடைய) சரீரம் வஜ்ரம்போல் (ஸ்ருஷ்டி செய்ய ஸமர்த்தமானதாக) ஆகிவிடும். பிறகு தங்களிடமிருந்து உண்டாகும் ஸர்வப்ராணிகளையும் உண்டாக்கிக்கொண்டு பசு முதலியவை உண்டாகப்போகின்றன. அதன் பிறகு ஸ்தாவர ஜங்கமங்களடங்கிய ஜகத் உண்டாகும்"] இதிலிருந்து பிரமன் ஸ்ருஷ்டி செய்ய ஞானமும், சக்தியுமில்லாமல் திகைத்ததாகவும் பகவான் ஸ்ருஷ்டி செய்ய வழியை உபதேசித்ததாகவும் அறிகிறோம். "மஹாதே$_3$வஸ் ஸர்வமேதே$_4$ மஹாத்மா ஹுத்வாத்மாநம் தே$_3$வதே$_3$வோ ப$_3$பூ$_4$வ" [மஹாத்மாவான மஹாதேவர் (சிவன்) ஸர்வமேதயாகத்தில்

தன்னை ஹோமம் செய்து தேவர்களுக்கெல்லாம் தேவரானர்.]என்பது போல் பிரமனும் பகவானைக்குறித்து ஆத்மஸமர்ப்பணமாகிற யாகத்தைச் செய்து ஸ்ருஷ்டி சக்தியை அடைந்தார் என்று ஏற்படுகிறது.

7. ஸப்தாஸ்யாஸந் பரித₄ய:, த்ரிஸ்ஸப்தஸமித₄: க்ருதா:
தே₃வா யத்₃யஜ்ஞும் தந்வாநா: அப₃த்₄நந் புருஷம் பசும்.

[இந்த யஜ்ஞத்துக்கு ஏழு வஸ்துக்கள் பரிதிகளாக ஆயின. இருபத்தொரு வஸ்துக்கள் ஸமித்துக்களாகச் செய்யப்பட்டன. யஜ்ஞத்தைச் செய்யும் தேவர்கள் நான்முகனுகிற புருஷனை (ஹோமம் செய்யப்படும்) பசுவாகக் கட்டினுர்கள்.] (ஸப்தா...பரிதய:) யாகம் செய்யும் போது அக்னிக்குத் தெற்கு, மேற்கு, வடக்கு திக்குகளிலும், உத்தர வேதிக்குத் தெற்கு, மேற்கு, வடக்கு திக்குகளிலும் ஆறுதண்டங்கள் (பலாசம் முதலிய மரங்களின் கொம்புகள்) வைக்கப்படுகின்றன. கிழக்கு திக்கில் ஸூர்யனைச் சேர்த்து ஏழு பரிதிகளாகக் கணக்கிடப்படுகின்றன. இந்த ஸ்ருஷ்டி யஜ்ஞத்திலும் ஏழு பரிதிகள் ஏற்பட்டன என்று சொல்லப்படுகிறது. அவையாவன:-ப்ருதிவீ, ஜலம், அக்னி, வாயு, ஆகாசம் எனப்படும் ஐந்து பூதங்களும், அஹங்காரமும் மஹானும். (த்ரிஸ்...க்ருதா:) இங்கு இருபத்தொரு ஸமித்துக்கள் அக்னியில் ஹோமம் செய்வதற்காகக் கல்பிக்கப்பட்டன. அவையாவன:-ப்ருதிவீ முதலிய ஐந்துபூதங்கள்; இவைகளுக்கு முறையே காரணமான கந்ததன்மாத்ரை, ரஸதன்மாத்ரை, ரூபதன்மாத்ரை, ஸ்பர்சதன்மாத்ரை, சப்ததன்மாத்ரை எனப்படும் ஐந்து தன்மாத்ரைகள்; கண், காது, நாக்கு, மூக்கு, தோல் எனப்படும் ஐந்து ஞானேந்திரியங்கள். வாய், கால், கை, ஆண் பெண் குறிகள், ஆஸனவாய் எனப்படும் ஐந்து கர்மேந்திரியங்கள்; மனஸ். ஆக இந்த இருபத்தொரு தத்வங்களும் ஸமித்துக்களாகக் கல்பிக்கப்பட்டன. ப்ரஜைகளை ஸ்ருஷ்டிப்பதற்கு இவைகள் உபகரணங்களாகையால் ஸ்ருஷ்டி யஜ்ஞத்திற்கு ஸாமக்ரிகளாகச் சொல்லப்படுகின்றன. (தேவா... பசும்) இப்படி யஜ்ஞம் செய்பவர்களான நித்யஸூரிகள் யஜ்ஞத்தில் ஹோமம் செய்யப்படும் பசுவான பிரமனை ப்ரக்ருதியாகிய யூபஸ்தம்பத்தில் கட்டினுர்கள். அடுத்த மந்த்ரத்தில் 'ப₃ர்ஹிஷி யஜ்ஞம் ப்ரௌக்ஷந்' [மூலப்ரக்ருதியிலுள்ள பிரமனை ப்ரோக்ஷித்தார்கள்] என்று வருவதால் இங்கு மூலப்ரக்ருதியாகிய யூபஸ்தம்பத்தில் கட்டினுர்கள் என்றே கொள்ளவேண்டும்.

8. தம் யஜ்ஞம் ப₃ர்ஹிஷி ப்ரௌக்ஷந், புருஷம் ஜாதம் அக்₃ரத:
தேந தே₃வா அயஜந்த, ஸாத்₄யா ருஷயச்ச யே.

[முதலில் உண்டானவனும் யஜ்ஞத்தில் ஹோமம் செய்யப்படு பவனும்; மூலப்ரக்ருதியில் கட்டப்பட்டவனுமான பிரமனைகிற புருஷனை ப்ரோக்ஷித்தார்கள். ஸாத்யர்களென்று சொல்லப்படும் நித்யஸூரிகளும், ரிஷிகளும் (முக்தர்களும்) அப்பசுவைக்கொண்டு யஜ்ஞம் செய்தனர்.] (தம் யஜ்ஞம்) யஜ்ஞத்தில் ஹோமம் செய்யப்படுபவனை அப்பிரமனை. (பர்ஹிஷி) 'பர்ஹி:' என்னும் பெயரையுடைய மூலப்ரக்ருதியில் முன்சொன்னபடி கட்டி. (ப்ரௌக்ஷந்) ப்ரோக்ஷணம் என்னும் ஸம்ஸ்காரத்தைச் செய்தார்கள். (புருஷம் ஜாதம் அக்ரத:) முன்னல் பிறந்தவனை அந்தப் பிரமனைகிற புருஷனை ப்ரோக்ஷித்தார்கள். ''ப்$_3$ரஹ்மா தே$_3$வாநாம் ப்ரத$_2$மஸ் ஸம்ப$_3$பூ$_4$வ'' [பிரமன் தேவர்களுள் முதலில் உண்டானன்] என்று முண்டகோபனிஷத்தில் சொல்லியிருக்கிறபடியால் இங்கு சொல்லப்படும் 'புருஷன்' பிரமனே என்று நிச்சயிக்கப்படுகிறது. (தேந அயஜந்த) அப்பிரமனைப் பசுவாகக்கொண்டு யாகம் செய்தார்கள். ஒரு த்ரவ்யத்தை ஒரு தேவதையை உத்தேசித்துக் கொடுப்பது யாகமெனப்படுகிறது. இங்கு நான்முகனைகிய ஹவிஸ்ஸை அநிருத்த நாராயணனைகிய அக்நியில் ஹோமம்செய்வதாகிய யஜ்ஞத்தைச் செய்தார்கள் என்று தாத்பர்யம். எவர் இம்மாதிரி யாகம் செய்தார்களெனில்: (ஸாத்யா தேவா;) ஸாத்யர்களென்று ப்ரஸித்தரான நித்யஸூரிகளே இப்படி யாகம் செய்தவர் என்று சொல்லப்படுகிறது. இப்புருஷஸூக்தத்தின் பூர்வானுவாகத்தில் கடைசி மந்திரத்தில் ''யத்ர பூர்வே ஸாத்$_4$யாஸ் ஸந்தி தே$_3$வா:'' [எந்தப் பரமபதத்தில் பழைமையானவர்களும் ஸாத்யர்கள் என்று சொல்லப்படுபவர்களுமான தேவர்கள் இருக்கிறார்களோ...] என்று சொல்லப்பட்டதால் இங்கு சொல்லப்படும் தேவர்கள் பிறப்பற்றவர்களான நித்யஸூரிகளே என்று நிஸ்ஸந்தேஹமாக நிர்ணயிக்கப்படுகிறது. (ருஷயச்சயே) முக்தர்களும் இந்த யஜ்ஞத்தில் கலந்துகொண்டார்கள் என்று சொல்லப்படுகிறது. பிரமனுக்கு ஸ்ருஷ்டிசக்தி கிடைத்தபின்பு ஸ்ருஷ்டிக்கப்பட்டவர்களான அத்ரி, பிருகு, வஸிஷ்டர் முதலிய ரிஷிகள் இங்கு சொல்லப்படும் ரிஷிகளாக ஆகமுடியாது. ஆகையால் முக்தர்களே இங்கு சொல்லப்படுபவர்கள். புஷோத்தமனை த்யானம் பண்ணுவதையே தங்களுக்கு உண்ணும் சோறும், பருகும் நீரும், தின்னும் வெற்றிலையுமாகக் கொண்டிருக்கும் முக்தர்களை ரிஷிகள் என்று சொல்லத்தட்டில்லை.

**9.** தஸ்மாத்$_3$ யஜ்ஞாத் ஸர்வஹுத:, ஸம்ப்$_4$ருதம் ப்ருஷதா$_3$ஜ்யம்
பசூம்ஸ்தாம்ஶ்சக்ரே வாயவ்யாந், ஆரண்யாந் க்$_3$ராம்யாச்சயே

[எல்லாவற்றையும் ஹோமம் செய்யப்பட்ட அப்பிரமனிடமிருந்து, தயிருடன் கூடிய நெய் (ஜகத்காரணபூதமான வீர்யம்) உண்டாயிற்று. அந்த நான்முகன் வாயுமார்க்கத்தில் ஸஞ்சரிக்கும் பக்ஷிகளையும், காட்டில் ஸஞ்சரிக்கும் ம்ருகங்களையும், கிராமத்திலிருக்கிற மிருகங்களையும் படைத்தனன்.]

''தஸ்மாதி₃தி ச மந்த்ரேண ஜக₃த்ஸ்ருஷ்டிஸ் ஸமீரிதா''

['தஸ்மாத்...' என்னும் மந்த்ரத்தினால் ஜகத்ஸ்ருஷ்டியானது சொல்லப்பட்டது.] என்று புருஷஸம்ஹிதையில் சொல்லப்பட்டது. 'ச'காரத்தினால் இதுமுதல் ஏழு மந்த்ரங்களில் ஜகத்ஸ்ருஷ்டி சொல்லப்படுகிறதென்று அறியப்படுகிறது. (ஸர்வஹுத: தஸ்மாத்யஜ்ஞாத்) தன்னையுள்ளிட்ட எல்லாவற்றையும் ஹோமம் செய்விக்கப்பட்ட அப்பிரமனிடமிருந்து. நித்யஸூரிகளால் பகவானிடம் ஆத்மஸமர்ப்பணம் செய்விக்கப்பட்ட அந்த நான்முகனிடமிருந்து. (ப்ருஷத₃ாஜ்யம் ஸம்ப்₄ருதம்) தயிருடன் கூடிய நெய் உண்டாயிற்று. இங்கு 'ப்ருஷதாஜ்யம்' என்று ஜகத் ஸ்ருஷ்டிக்குக் காரணமான வீர்யம் சொல்லப்படுகிறது, (பசூம்ஸ்தாந்...) வாயு ஸஞ்சரிக்கும் படியான ஆகாசத்தில் பறக்கும் பக்ஷிகளையும், காட்டில் ஸஞ்சரிக்கும் புலி, கரடி முதலிய ப்ராணிகளையும், கிராமங்களில் திரியும் பூனை முதலிய ப்ராணிகளையும் அந்த நான்முகன் ஸ்ருஷ்டித்தார்.

10. தஸ்மாத்₃ யஜ்ஞாத் ஸர்வஹுத: ருசஸ் ஸாமானி ஜஜ்ஞிரே
ச₂ந்த₃ாம்ஸி ஜஜ்ஞிரே தஸ்மாத், யஜுஸ் தஸ்மாத₃ஜாயத.

[எல்லாவற்றையும் ஹோமம் செய்யப்பட்ட அப்பிரமனிடமிருந்து ருக்வேதங்களும், ஸாமவேதங்களும் உண்டாயின. அந்த நான்முகனிடமிருந்து சந்தஸ்ஸுக்கள் உண்டாயின; யஜுர்வேதமும் அவனிடமிருந்து உண்டாயிற்று.]

பிரமனுடமிருந்து ருக்யஜுஸ்ஸாமவேதங்களும், காயத்ரீ முதலிய சந்தஸ்ஸுக்களும் உண்டாயினவென்றுசொல்லப்படுகிறது.

''யோ ப்₃ரஹ்மாணம் வித₃த₄ாதி பூர்வம்
யோ வை வேத₃ாம்ச்ச ப்₃ரஹிணோதி தஸ்மை''

[எந்தப் பரமாத்மாவானவர் ஸ்ருஷ்டிகாலத்தில் பிரமனைப் படைத்து அவனுக்கு வேதங்களை உபதேசிக்கிறாரோ...] என்று சொல்லப்பட்டிருக்கிறபடியால் பரமபுருஷனிடமிருந்து உபதேசம்பெற்று

வேதங்களை வேதன் (பிரமன்) வெளிப்படுத்தினார் என்றே கொள்ள வேண்டும். "தஸ்ய ஹ வா ஏதஸ்ய மஹதோ பூ₄தஸ்ய நிச்வஸிதம் ஏதத்₃ ருக்₃வேதோ₃ யஜுர்வேத₃ஸ் ஸாமவேதோ₃..." [ருக் யஜுஸ் ஸாமம் முதலிய வேதங்களெல்லாம் பரமாத்மாவினுடைய மூச்சுக்காற்றுகள்.] என்று மஹாபுருஷனுடைய மூச்சுக்காற்றாகச் சொல்லப்பட்ட அபௌருஷேயமான வேதங்களைப் பிரமன் பிரகாசப்படுத்தினான் என்று ஏற்படுகிறது.

**11. தஸ்மாத₃ச்வா அஜாயந்த ஏகேசோப₄யாத₃த:**
**க₃ாவோ ஹ ஜஜ்ஞிரே தஸ்மாத் தஸ்மாத் ஜாதா அஜா வய:**

[அந்த நான்முகனிடமிருந்து குதிரைகளும், ஒரு பக்கத்தில் பற்களை யுடைய எருமை முதலிய ப்ராணிகளும். இரண்டுபக்கத்தில் பற்களை யுடைய கழுதை முதலியவைகளும் உண்டாயின. அவரிடமிருந்து பசுக்களும் உண்டாயின.]

(காவோ ஹ...) ஒருபக்கத்தில் பற்களையுடைய ம்ருகங்களில் பசுக்களும் அடங்கினபோதிலும் அவைகளின் மேன்மையை முன் னிட்டு அவை தனியாகச் சொல்லப்படுகின்றன என்று விஷ்ணு சித்தாசாரியர் வியாக்யானம் செய்தார். புருஷோத்தமனுடைய ஆரா தனமாகிய யஜ்ஞத்திற்கு உபயோகப்படும் பால், தயிர், நெய் முத லியவை பசுக்களிடமிருந்தல்லவோ கிடைக்கிறது.

**12. யத் புருஷம் வ்யத₃து₄: கதித₄ா வ்யகல்பயந்**
**முக₂ம் கிமஸ்ய கௌ ப₃ாஹூ, காவூரு பாத₃ாவுச்யேதே.**

[பிரமனாகிய புருஷனைப் (பசுவாகச்) செய்தபோது, எவ்வளவு வித மாகக் கல்பித்தார்கள்? இந்த ப்ரஹ்மாவினுடைய முகம் எதுவாக ஆயிற்று? கைகள் எவர்களாக ஆயின? துடைகளும் திருவடிகளும் எவர்களாகச் சொல்லப்படுகின்றன?]

யஜ்ஞத்தைச் செய்பவர்களான ப்ராஹ்மணர் முதலியவர்களின் ஸ்ருஷ்டியை இம்மந்த்ரமும் அடுத்த மந்த்ரமும் சொல்லுகின்றன. இந்த ருக் கேள்வியாகவும் அடுத்த ருக் பதிலாகவும் இருக்கின்றன. நித்யஸூரிகள் பிரமனைப் பசுவாகக் கல்பித்தபோது அவருடைய அவயவங்கள் எத்தனைவிதமாகக் கல்பிக்கப்பட்டனவென்றும் எந் தெந்த அவயவங்களினின்றும் எந்தெந்தப் பதார்த்தங்கள் படைக்கப் பட்டன வென்றும் கேட்கப்படுகிறது. விசேஷமாக முகம், கைகள், துடைகள், பாதங்கள் இவைகளிலிருந்து எவர் உண்டானார்கள் என்றும் கேட்கப்படுகிறது.

**13. ப்3ராஹ்மணோஸ்ய முக₂மாஸீத் ப3ாஹூ ராஜந்ய: க்ருத:
ஊரு தத₃ஸ்ய யத்₃வைச்ய: பத்₃ப்₄யாம் சூத்₃ரோ அஜாயத.**

[ப்ராஹ்மணன் இவருடைய முகமானான். கைகள் க்ஷத்ரியனாகச் செய்யப்பட்டன. அப்பொழுது துடைகள் வைச்யனாக ஆயின. திருவடிகளிலிருந்து சூத்ரன் உண்டானான்.]

(ப்ராஹ்மணோஸ்ய...) முகம் ப்ராஹ்மணனாக ஆயிற்று என்று சொல்லப்படுகிறது. 'பாதங்களிலிருந்து சூத்ரன் உண்டானான்' என்று கடைசியில் சொல்லப்படுகிறபடியால் இங்கும் முகத்திலிருந்து ப்ராஹ்மணன் உண்டானான் என்றே தாத்பர்யம். ப்ராஹ்மணன் அதிகமான ஞானத்தை உடையவனாதலால் ஞானேந்த்ரியங்களெல்லாவற்றையும் உடையதான முகத்தினின்றும் அவனைப் படைத்தார். (பாஹூ...க்ருத:) கைகளிலிருந்து க்ஷத்ரியன் உண்டானான். யுத்தம் செய்வதைத் தொழிலாக உடைய க்ஷத்ரியனுக்குத் தோள் வலிமையும் கைவன்மையும் அவச்யமாதலால் ப்ரஹ்மதேவன் அவனைத் தன் கைகளிலிருந்து ஸ்ருஷ்டித்தார். (ஊரூ...வைச்ய:) உழுதலையும் வியாபாரத்தையும் தொழிலாகவுடைய வைச்யனுக்குத் துடைபலம் முக்யமாதலால் நான்முகன் அவனைத் தன் துடைகளிலிருந்து படைத்தார். (பத்ப்யாம்...) பாதங்களினின்றும் நான்காவது வர்ணத்தைச் சேர்ந்த சூத்ரன் உண்டானான். முதல் மூன்று வர்ணத்தவர்களுடைய ஏவல்களைச் செய்வதே ஸ்வதர்மமாகவுடைய சூத்ரனுக்குக் கால்வன்மை அவச்யமாதலால் பிரமன் தன் கால்களிலிருந்து அவனைப் படைத்தார்.

இதிஹாஸ புராணங்களில் பலவிடங்களில் நாராயணனுடைய முகம், கைகள், துடை, திருவடி முதலியவைகளிலிருந்து நான்கு வர்ணத்தவர்களும் உண்டானதாகச் சொல்லப்பட்டிருக்க இங்கு நான்முகனின் அவயவங்களிலிருந்து அவர்கள் உண்டானதாகச் சொல்லுவது எப்படிப் பொருந்தும்? என்ற ஸந்தேஹம் ஏற்படுகிறது. பிரமனை சரீரமாகக்கொண்ட புருஷோத்தமனே இப்படிப் படைப்பதாலும், நான்முகனுடைய அவயவங்கள் நாராயணனுடைய அவயவங்களேயாகையாலும் இதில் ஒரு விரோதமுமில்லை.

இந்தப் புருஷஸூக்தம் முழுவதும் தைத்திரீய ஆரண்யகத்தில் மூன்றாவது ப்ரச்நத்தில் படிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் நான்கு ஜாதிகளும் ஸ்ருஷ்டிகாலத்திலேயே தனித்தனியாகப் படைக்கப்பட்டனவென்று வேதத்திலிருந்தே அறிகிறோம். நவீனகாலத்தில் சிலர்

வேதங்களில் ஜாதி சொல்லப்படவில்லையென்றும், புராணங்களி லேயே ஜாதிப்பிரிவினை சொல்லப்பட்டிருக்கிறதென்றும் கட்டுரைகள் எழுதுவது இதனால் நிராகரிக்கப்பட்டது. கீதையிலும் பகவான்,

**"சாதுர்வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம் கு₃ணகர்மவிப₄ாக₃ச:"**

[குணம், தொழில் முதலியவைகளில் பேதங்களுடன் கூடிய நான்கு வர்ணங்களும் என்னால் ஸ்ருஷ்டிக்கப்பட்டன.] என்று அருளிச் செய்திருக்கிறார்.

ஜனஸமூஹத்தினுடைய முகஸ்தானமாயிருக்கும் ப்ராஹ்மண ஜாதி பிரமனுடைய முகத்தினின்றும் உண்டாயிற்று. முகத்தில் ஞானேந்த்ரியங்களான கண், மூக்கு, நாக்கு, செவி, மெய் (தோல்) என்னும் ஐந்தும் இருக்கின்றன. "ஸர்வேந்த்₃ரியாணும் நயநம் ப்ரத₄ாநம்" என்று எல்லா இந்த்ரியங்களிலும் முக்கியமானதாகச் சொல்லப்படும் கண்ணினாலேயே படைக்கப்பட்ட எல்லாப் பொருள்களையும் பார்க்கிறோம். கண்ணால் பார்க்கப்பட்டதே ப்ரத்யக்ஷப்ரமாணமாகிறது. படைக்கப்பட்ட பொருள்களைப் பார்ப்பதிலிருந்து அவைகளை நியமிக்கும் ஜீவனையும், படைப்பவனான ஈச்வரனையும் அறிகிறோம். அம்மாதிரியே ப்ராஹ்மணர்களும் தீர்க்கதர்சிகளாகவும், ஜீவாத்ம பரமாத்மதத்வஜ்ஞானிகளாகவும உலகத்திற்குக் கண் போன்றும் விளங்குகிறார்கள். கண்ணிற்கு அடுத்தபடியான மேன்மைவாய்ந்தது காது. சப்தராசியான வேதமும் கர்ணபரம்பரையாகவே வந்தது. "ப₃ஹுநா ச்ருதேந" என்கிறபடி பலரிடம் கேட்டுப் பரமாத்மஜ்ஞானத்தை அடைவதற்கு ஸாதனமாயிருப்பது இது. ரஸனேந்திரியம் ருசிப்பதாகிற ஞானத்தை அறிகிறது. ஞானத்திற்கு ஆதாரமான தேஹத்தைப் போஷிப்பதற்கும் ரஸனேந்திரியம் அவச்யம். **"ஸ்வதே₃ஹம் ஆத்₃யம் க₂லு த₄ர்மஸாத₄நம்"** [தன்னுடைய தேஹமல்லவோ தர்மத்திற்கு முதன்மையான ஸாதனம்.] என்று சொல்லப்பட்டிருக்கிறது. அச்யுதனுக்கு அளிக்கப்பட்ட ப்ரஸாதங்களை ருசிப்பதற்கே ஏற்பட்டது நாக்கு. க்ராணேந்திரியம் (மூக்கு) புருஷோத்தமனுக்கு ஸமர்ப்பிக்கப்பட்ட புஷ்பம், சந்தனம் முதலியவைகளை முகர்வதற்கு ஸாதனமானது. ச்வாஸம் விடுவதற்கும் மூக்கு உபயோகமாயிருக்கிறது. தொடுவதினால் ஏற்படும் உணர்ச்சியை அறிவிப்பது த்வக் (தோல்) என்னும் இந்த்ரியம்.

**"உடுத்துக்களைந்த நின் பீதகவாடை உடுத்துக் கலத்ததுண்டு**
**தொடுத்த துழாய் மலர் சூடிக் களைந்தன சூடும் இத்தொண்டர்களோம்"**

என்பதுபோல் தம்முடைய ஞானேந்த்ரியங்களையெல்லாம் புரு ஷோத்தமன் விஷயத்தில் ஈடுபடுத்துபவர்களாகையால் ப்ராஹ் மணர்கள் முகத்தினின்றும் உண்டானார்கள். கர்மேந்த்ரியங்களில் ப்ரதானமான வாயும் முகத்திலிருக்கிறது. இது ப்ராம்ஹணர்களின் வாக்குவன்மையையும் சாபானுக்ரஹஸாமர்த்யத்தையும் காட்டுகிறது. வாயினால் ''கடல் சூழ்ந்த மண்ணுலகம் வாழ'' என்றும், ''ஸர்வேஜநா: ஸுகி₂நோ ப₄வந்து'' என்றும் அச்யுதனால் படைக்கப்பட்ட அவனியி லுள்ளோர் எல்லோரும் ஸுகமாயிருக்கவேண்டுமென்று வாழ்த்து வது ப்ராஹ்மணனுடைய தொழில் என்று உணர்த்தப்படுகிறது. வேதாத்யயனத்திற்கும். வேதத்தை ஓதுவிப்பதற்கும் யஜ்ஞம் முதலியவைகளைப் பண்ணிவைப்பதற்கும், வாய் உபயோகப்படுவ தாகையால் இவைகள் அவனுடைய தொழில்கள் என்றும் தெரிவிக் கப்படுகின்றன. முகம் புத்தி (மூளை)யையும் தேஜஸ்ஸையும் உடைய தாதலால் ப்ராஹ்மணன் புத்திமானாகவும், ப்ரஹ்மதேஜஸ்ஸை உடையவனாகவும் இருப்பான் என்று தெரிவிக்கப்படுகிறது. ப்ரஹ்ம ஜ்ஞானியாகையால் ப்ராஹ்மணன் எனப்படுகிறான். ராஜாக் களுக்கு மந்த்ரியாகவும் ஆசார்யனாகவும் இருந்து புத்திமதியும் உப தேசமும் செய்பவன் ப்ராஹ்மணன். இவ்வளவு கார்யங்களையும் செய்வதற்கேற்பட்ட ப்ராஹ்மணன் பிரமனின் முகத்திலிருந்து உண்டானான். ப்ராஹ்மணர்களுடைய தேஹகுடும்பஸம்ரக்ஷணங் கள் ராஜாக்களால் நன்கு கவனிக்கப்பட்டு வந்ததால் முன்காலத்தில் அவர்கள் தங்கள் தொழிலை சரியாகச்செய்துவந்தார்கள். ஆசார் யர்கள் காலத்தில், ராஜாங்கம் பரதேசிகள் கையில் அகப்பட்ட போதிலும், ப்ராஹ்மணர்கள் உஞ்சவ்ருத்தி செய்தாவது தங்கள் தொழிலைச் செய்துவந்தார்கள். கலியின் கோலாஹலத்தினாலும், பல வித அஸௌகர்யங்களாலும், இப்போது ப்ராஹ்மணர்கள் தங்கள் தொழிலைவிட்டுப் பல தொழில்களிலும் புகும்படி நேரிட்டிருக்கிறது. சில பாக்யவான்கள் இக்காலத்திலும் வைதிகமார்க்கத்திலிருந்து கொண்டு பணப்பேயாட்படாமல் முறைதவறாமல் இருந்துகொண்டு வருகிறார்கள்.

கர்மேந்த்ரியங்களுள் வலிமை வாய்ந்ததான கையிலிருந்து தோளாண்மையுடைய க்ஷத்ரியன் பிறந்தான். தேஹம் கையினுடைய பலத்தினாலேயே ரக்ஷிக்கப்படுவதுபோல் ஜனஸமூஹமும் க்ஷத்ரிய னுடைய தோள்வலியினால் ரக்ஷிக்கப்படுகிறது. ராஜாக்களில்லாவிடில் உலகம் அராஜகமாகி அழிந்துவிடும். அதனாலேயே அரசனுக்குத் திருமாலின் அம்சம் உள்ளதாகக் கூறப்படுகிறது.

எல்லாரும் உண்டு ஜீவிப்பதற்கு அவச்யமான உணவுப் பொருள்களை உண்டாக்குவதையும் பலருக்கு வினியோகிப்பதையும் தொழிலாகவுடைய வைச்யன் துடையிலிருந்து உண்டாக்கப்பட்டான். வைச்யனுடைய தாளாண்மையினலேயே வேளாண்மை நடக்கிறதன்றோ. எல்லாருடைய தேஹத்தையும் போஷிப்பது வைச்யனுடைய தொழில்.

இம்மூவர்ணத்தார்க்கும் வேண்டிய உபகரணங்களை ஸம்பாதித்துக் கொடுப்பதற்காக ஆடி ஓடித் திரிந்து நடந்து கார்யம் செய்பவனகையால் சூத்ரன் காலிலிருந்து படைக்கப்பட்டான். கால்கள் சரீரத்தைத் தாங்குவதுபோல் அவன் இம்மூவர்ணத்தாரையும் தாங்குகிறன். காலிலிருந்து உண்டானதால் ஒருவிதமான தாழ்வும் கிடையாது. எம்பெருமானுடைய திருவடிகளே எல்லோருக்கும் வணங்கும் துறையாகும். மற்ற வர்ணத்தார்க்குள்ள நியமநிஷ்டைகள், ஆசாரவ்யவஹாரங்கள் முதலிய கஷ்டங்கள் இவர்களுக்குக் கிடையாது. சொன்னதைச் செய்வதில் பாபமும் கிடையாது; பொறுப்பும் கிடையாது. அவர்களுக்கு நற்கதியடைவது மிகவும் ஸுலபமாகும். பிறப்பினலேயே அவர்களுக்கு நைச்யமும், அஹங்கார மமகாரமில்லாமையும் ஏற்பட்டிருக்கின்றன. ஆசார்யர்களும் உயர்ந்த வர்ணத்தார்க்குப் பிறப்பினலேற்படும் அஹங்கார மமகாரங்கள் அழியவேண்டுமென்று உபதேசித்திருக்கிறர்கள். "தொழுமினீர் கொடுமின் கொண்மின்" என்று அவர்களிடமிருந்து ஞானத்தைப் பெற்றுக்கொள்வதிலும், அவர்களுக்கு ஞானத்தைக் கொடுப்பதிலும் தடையில்லை என்று தொண்டரடிப்பொடியாழ்வாரும் அருளியிருக்கிறர். போ₃த₄னம், ரக்ஷணம், போஷணம், ஸேவகம் என்பவை முறையே நான்கு வர்ணத்தாருக்கும் தொழிலாகும். ஒவ்வொருவரும் மற்ற வர்ணத்தார்க்காக உழைக்கிறர்கள். நால்வரும் பகவானுடைய அவயவங்களே. அவர்களுக்குள் ஏற்றத்தாழ்வு கிடையாது. அவர்கள் ஒருவர்க்கொருவர் சண்டையிடுவது சரீரத்தின் அவயவங்கள் ஒன்றுக்கொன்று சண்டையிடுவதையொக்கும். வயிறுடன் மற்ற அவயவங்கள் சண்டையிட்ட கதை எல்லோரும் அறிந்தது.

நமது ஸநாதன வைதிக தர்மமாகிற மண்டபத்தைத் தாங்கும் தூண்கள் ஐந்து. நடுத்தூண் ச்ருதிஸ்ம்ருதீதிஹாஸ புராணங்கள் முதலியவையும் அவைகளில் சொல்லப்பட்டிருக்கும் தெய்வங்களின் கோவில்களுமேயாகும். ஜாதி, ஸ்த்ரீகள், சொத்து, சுதந்திரம் ஆகிய நான்கும் மற்ற தூண்களாகும். இவைகளைக் காப்பாற்றுவதே

அரசர்களின் கடமையென்று பாரதத்தில் ராஜதர்மத்தில் பரக்கப் பேசப்பட்டிருக்கிறது. ச்ருதிஸ்ம்ருதிகளில் இவைகளைப்பற்றி ஏற்பட்டிருக்கும் சட்டதிட்டங்களை மாற்ற அரசனுக்காவது, அவனுடைய மந்த்ரிகளுக்காவது, ஜனப்ரதிநிதி ஸபைக்காவது அதிகாரம் கிடையாதென்பது ஸர்வஸித்தமாக ஏற்பட்டிருந்தது. இதை மாற்ற ப்ரயத்னம்செய்த வேனமஹாராஜன் அடைந்த கதியை ஹரிவம்சம் முதலியவைகளில் நன்கு காணலாம். இக்காலத்தில் அந்த நியமத்திற்கு 'ஏட்டிக்குப் போட்டியாக' மாற்றமுடியாதது ஒன்றும் கிடையாது என்ற கொள்கையைக் கொண்டிருக்கிறார்கள். முன்பு நியமிக்கப்பட்டதெல்லாம் பிசகென்றுகொண்டு அவைகளுக்கு நேர் மாறாக ஆக்கவேண்டுமென்று சட்டம் செய்கிறார்கள். கோயில்களேற்பட்ட தத்வத்திற்கு விரோதமாகச் சட்டங்களேற்படுத்தி தெய்வ ஸாந்நித்யத்தைச் சிதைத்தது தேசமெங்குமறிந்ததே. பிறப்பையும் புத்தியிருப்பதையுமே குற்றமாகக்கொண்டு உத்யோகங்களுக்கு உள்ளே விடாமலும், பாடசாலைகளில் படிக்கவிடாமலும் ப்ராஹ்மணர்களை த்வேஷிப்பது எல்லோரும் அறிந்ததே. ப்ராஹ்மணர்கள் க்ருஷ்ணனையே கதியாகக் கொண்டவர்கள். க்ருஷ்ணனும் ப்3ராஹ்மணோ மம தே3வதா'' [ப்ராஹ்மணன் என்னுடைய தேவதை] என்று அருளிச்செய்தார். ஆகையால் ப்ராஹ்மண த்வேஷமானது தெய்வத்வேஷத்திலேயே முடியுமென்று எல்லோரும் பயந்துகொண்டிருந்தோம். அம்மாதிரியே ப்ராஹ்மணத்வேஷத்தில் ஆரம்பித்த ஒரு சாரார் தெய்வத்வேஷத்திற்குக் கொடிகட்டிக்கொண்டு கதறுகிறார்கள். ஜாதியென்பது அவரவர் கர்மானுகுணமாக பகவந் நியமனப்படி ஏற்பட்டது. சொத்து அவரவர் பண்ணிய புண்ய பாபத்தின் பலனேயாகும். ''மேலைத்தவத்தளவேயாகுமாம் தான்பெற்ற செல்வம் குலத்தளவே யாகும் குணம்'' என்றல்லவோ சொல்லப்பட்டிருக்கிறது. ஆங்கிலேயர்களும் பணத்தினாலும் அந்தஸ்தினாலும் பேதம் ஏற்படுத்தியிருக்கிறார்கள். சமதர்மக்கொள்கை பேசும் ருஷ்யா தேசத்திலும் அதிகாரப்பதவியினால் வித்தியாசங்களிருக்கின்றன. அம்மாதிரியான வித்தியாசங்கள் இங்கு கிடையா. பேதமென்பது இயற்கையின் சட்டமாகும். அதை ஒழிப்பதென்பது மனிதனால் முடியாத முயற்சியே. ஒருவிதமாக ஒழிக்கப்பார்த்தால் மற்றொரு விதமாக முளைக்கும். பழைய பேதத்திற்குப் பழகியிருக்கிறோம். 'அபேதம்' என்பதினாலேற்படும் புது பேதங்கள் படுவிஷத்தைக் கக்குமேயொழிய வேறொரு குணமும் காணக்கிடைக்காது. ஸ்த்ரீகள் மனுஷ்யவர்க்கத்திற்கே தாயாயிருக்கும் தனிப்பெருமையுடையவர்

கள்; அவர்கள் அதற்காகவே பிறப்பிக்கப்பட்டவர்கள். அதற்கனு குணமாகவே அவர்களுடைய கல்வியோ, குணமோ, செயலோ இருக்கவேண்டும். அவைகளை அழிக்க முயன்றால் மானிட ஸமூஹமே முறைகெட்டு நிலைகலங்கி அழிந்துவிடும். குடும்பமென்பது இடும்பையாய்விடும், க்ருஹமென்பது குட்டிச்சுவராய்விடும். கற்பு நிலையென்பது அழிந்து, கல்யாணமென்பது ஒழிந்து உயிர்வாழ்வ தற்கோர் நோக்கமுமில்லாமல் உலகம் சுடுகாடாய்விடும், ஆண் வார்சுக்ரமம் மாறிப் பெண்மலையாளமாகிவிடும். சொத்து விஷயத்தைப்பற்றிச் சில உண்மைகள் உரைக்கவேண்டியிருக்கிறது. உழைப்பின் கூலியில் செலவழித்ததுபோக மிகுந்ததைச் சேர்த்து வைத்ததே சொத்தாகும். அதை அழிக்க முயற்சித்தார்களாகில் உழைப்பதற்குத் தூண்டுகோலே இல்லாமல் போய்விடும். எல்லோரும் சோம்பேறிகளாகத் திரிவார்கள். சொத்தை அபஹரிக்கச் சட்டம் செய்வது பகல்கொள்ளைக்கு ஸமானமாகும். ஏழைகளுக்கு என்ன கதி? என்று நினைக்கலாம். அவர்களுக்கு உழைக்க வேலையும், உண்ண உணவும், உடுக்க ஆடையும் கிடைக்க ஏற்பாடு செய்ய வேண்டியது முற்காலத்திலும் ராஜதர்மமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. செய்வதற்கு வழிகளும் சொல்லப்பட்டிருக்கின்றன. சொத்து என்னும் தத்வமழிந்தால், கணவன், மனைவி என்னும் ஸம்பந்தமும், தாய், தகப்பன், பிள்ளை, பெண் என்னும் ஸம்பந்தமும் அழிந்துவிடும். குடும்பமென்பது உடும்பு பிடித்தவன் கைபோலாகிவிடும். இவைகளெல்லாம் போனால் சுதந்திரமும் பெரும்பாலும் தானாகவே போய்விடும். பேச்சு சுதந்திரம், கார்ய சுதந்திரம், முன்னோர் மொழிந்த முறைப்படி வாழும் சுதந்திரம், மத சுதந்திரம் முதலியவைகளை இழப்போமாகில் நாம் நடைபிணமாகவே கருதப்படுவோம். உயிர் வாழ்வதற்கு ஓர் நோக்கமும பலனும் இல்லாமல் போய்விடும். ஆகையினால் சீர்திருத்தக்காரர்கள் முன் இருப்பதை மாற்றுவதற்கு முன் பின்வரும் கெடுதல்களைப்பற்றி தீர்க்காலோசனை செய்ய வேண்டும். இதைப்பற்றிப் பரக்கப்பேசில் பாரதமாம். விரிவிற் கஞ்சி இத்துடன் விடுத்தோம்.

14. சந்த்₃ரமா மநஸோ ஜாத:, சக்ஷோஸ் ஸூர்யோ அஜாயத
முக₂ாதி₃ந்த்₃ரச் சாக்₃நிச்ச, ப்ராணாத்₃ வாயுரஜாயத.

[மனத்தில் நின்றும் சந்திரன் உண்டானான். கண்ணிலிருந்து ஸூர்யன் உண்டானான். முகத்திலிருந்து இந்த்ரனும், அக்னியும் ஜனித்தார்கள். ப்ராணனிலிருந்து வாயு உண்டானான்.]

இந்த மந்த்ரத்தில் ஸர்வலோகோபகாரகமான ஸ்ருஷ்டியைச் சொல்லுகிறது. (சந்த்ரமா...ஜாத:) சந்திரன் மனத்திலிருந்து உண்டானான். ஏன் மனஸ்ஸிலிருந்து சந்திரன் உண்டாகவேணும்? மற்ற அங்கங்களிலிருந்து ஏன் உண்டாகக்கூடாது? பிரமனை சரீரமாகக் கொண்ட பகவானுடைய மனஸ்ஸிற்கும், சந்திரனுக்கும் எவ்விதமான ஒற்றுமை இருக்கிறது? உலகிலிருப்பவர்களுடைய மனஸ்ஸிற்கு ஸந்தோஷத்தைத் தருபவனாதலால் சந்திரன் மனஸ்ஸிலிருந்து படைக்கப்பட்டான். அவன் உலகத்திலுள்ள உயிர்களுக்கும், பயிர்களுக்கும் குளிர்ச்சியையும் ஸந்தோஷத்தையும் உண்டாக்குபவன். அவனுடைய கிரணங்களே பயிர்களுக்கு உயிர்கொடுப்பவை. சந்திரனில்லாவிடில் உலகம் காய்ந்து தீய்ந்துவிடும். கேசவனும் குளிர்ந்த சுபமான மனத்தையுடையவன். அப்படிப்பட்ட மனத்தினால் எல்லோரும் வாழ்வதற்கு ஸங்கல்பித்து, அத்வேஷத்தை உண்டாக்கி, ஆபிமுக்யத்தை வளர்த்து ஞானப்பயிரை விருத்திசெய்கிறான். மேலும் சந்திரன் மனத்திற்கு அதிதேவதையாகவும் இருக்கிறான். இக்காரணங்களால் சந்திரன் புருஷோத்தமனுடைய மனத்திலிருந்து உண்டானான். (சக்ஷோஸ்...) உலகத்திற்குக் கண்ணாயிருப்பவனும், வெளியிருளை விரட்டுபவனுமான ஸூர்யன் அஞ்ஞானமாகிய இருளைப்போக்குகிற, மண்ணுக்கும் விண்ணுக்கும் கண்ணாகிய கண்ணனுடைய கண்ணிலிருந்து உண்டானான். உலகத்தைப் பார்க்கும்படி செய்வது கண். ஸூர்யனும் பார்ப்பதற்கு ஸாதனமாயிருக்கிறான். ஸூர்யன் கண்ணுக்கு அதிதேவதை. கண்ணின் ரோகங்கள் ஸூர்யநமஸ்காரம் செய்வதினால் போக்கப்படுவதாகச் சொல்லப்படுகிறது. ஸூர்யநமஸ்காரம் வேதத்திலும் உரைக்கப்படுகிறது. ஸூர்ய நமஸ்காரத்திலும் "த்$_4$யேயஸ்ஸதா$_3$ ஸவித்ரு மண்$_3$ல மத்$_4$ய வர்த்தீ நாராயண:" என்று சொல்லப்பட்ட, தாமரைக்கண்ணனான நாராயணனே நமஸ்கரிக்கப்படுபவன். ஸூர்யன் தன் கிரணங்களால் பாஹ்யாந்தகாரத்தைப் போக்கடித்து, ப்ராணிகளுக்கு உஷ்ணத்தைக்கொடுத்து ஜீவிக்கும்படி செய்கிறான். கேசவனுடைய கண்ணிலிருந்து உண்டாகும் கடாக்ஷத்தினால், ஜீவர்கள் அஜ்ஞானம் நசிக்கப்பெற்று ஞானமடைந்து மோக்ஷம் பெறுகிறார்கள். ஆதித்யன் தேஜோமயமானவன். அச்யுதனும் தேஜோமயமான தாமரை போன்ற கண்ணையுடையவன். "தஸ்ய யதா$_2$ கப்யாஸம் புண்ட$_3$ரீகமேவ மக்ஷிணீ" [அந்தப் பரமபுருஷனுக்கு ஸூர்யனால் மலரும் தாமரை போன்ற இரு கண்களிருக்கின்றன.] என்றல்லவோ பரப்ரஹ்ம லக்ஷணம் சொல்லப்பட்டிருக்கிறது. இக்காரணங்களால் பரந்தாம

னுடைய கண்களிலிருந்து பாஸ்கரன் உண்டானுன். (முகாத்...) முகம் ஆதிபத்யத்தையும் தேஜஸ்ஸையும் காட்டுகிறது. ஆகையால் தேவர்களுக்கு அதிபதியானவனும், தேஜோவானுமாயிருக்கும் இந்திரன் முகத்திலிருந்து உண்டானுன். தேஜோமயமான அக்னியும் முகத்திலிருந்து உண்டானுன். "அக்₃நிமுக₂ா வை தே₃வதா:" [தேவதைகள் அக்னியை முகமாக உடையவர்கள்.] என்கிறபடி தேவர்களுக்கு முகமாயிருக்கும் அக்னி முகத்திலிருந்து உண்டாவது நியாயமே. (ப்ராணுத் வாயுரஜாயத) ப்ராணனிலிருந்து வாயு உண்டானுன். ப்ராணன் ஒரு வாயுவிசேஷமே. அதிலிருந்து வாயு உண்டாயிற்று. எல்லோருக்கும் ப்ராணனுயிருக்கும் வாயு ப்ராணனிலிருந்து உண்டாவது பொருத்தமுடையது. வாயுவில்லாவிடில் ஜீவிக்கமுடியாது. அனுமான் வஜ்ராயுதத்திஞல் அடிபட்டபோது வாயு ஸ்தம்பித்ததும் உலகமெல்லாம் திண்டாடினது எல்லோரும் அறிந்ததே. இம்மாதிரியாக உலகத்திற்கு உபகாரகமான வஸ்துக்கள் உண்டாக்கப்பட்டன.

**15.நாப்₄யா ஆஸீ த₃ந்தரிக்ஷம், சீர்ஷ்ணோ த்₃யௌஸ் ஸமவர்த்தத**
**பத்₃ப்₄யாம் பூ₄மிர் தி₃சச் ச்ரோத்ராத், தத₂ா லோகாந் அகல்பயந்**

[நாபியிலிருந்து அந்தரிக்ஷம் உண்டாயிற்று. தலையிலிருந்து ஸ்வர்க்கம் உண்டாயிற்று. பாதங்களினின்றும் பூமி உண்டாயிற்று. திக்குகள் காதிலிருந்து உண்டாயின. அப்படியே லோகங்களையெல்லாம் பிரமன் படைத்தான்.]

இதில் உலகங்களுடைய ஸ்ருஷ்டி சொல்லப்படுகிறது. (நாப்யா...) தேஹத்தின் நடுவிலிருக்கும் நாபியிலிருந்து பூமிக்கும் மேலுலகங்களுக்கும் நடுவிலிருக்கும் அந்தரிக்ஷம் உண்டாயிற்று. (சீர்ஷ்ணோ...) மேலேயிருக்கும் தலையிலிருந்து மேலேழுலோகங்களும் உண்டாயின. இங்கு 'த்₃யௌ:' என்னும்பதம் மேலேழு உலகங்களையும் உணர்த்துகிறது. (பத்ப்யாம் பூமி:) பாதங்களிலிருந்து பூமி உண்டாயிற்று. திருவடிகளிலிருந்து பிறந்ததாலன்றோ 'பொருவில் சீர்ப்பூமி' என்று ஆழ்வாரும் புகழ்ந்திருக்கிருர். தேஹத்தைத் தாங்குவது திருவடி. எல்லோரையும் தாங்குவதால் தரணியென்று பெயர்பெற்றது பூமி. கேசவநம்பியைக் கால்பிடிக்கும் பேற்றுக்குப்பிறந்தவள் பூமிதேவி.

"கிடந்திருந்து நின்றளந்து கேழலாய்க் கீழ்ப்புக்கு
இடந்திடும் தன்னுள் கரக்கும் உமிழும்

தடம் பெரும் தோளாரத்தழுவும் பாரென்னும்
மடந்தையை மால் செய்கின்ற மால் ஆர் காண்பாரே"

[கேழல்-வராஹம். இடந்திடும்-குத்தி எடுக்கும். தன்னுள் கரக்கும்-தன் வயிற்றினுள் மறைத்து வைக்கும். பார்-பூமி. மால்-1. திருமால், 2. அன்பு.] என்று நம்மாழ்வாரும்,

"அரவாகிச் சுமத்தியால் அயிலெயிற்றின் ஏந்துதியால்
ஒரு வாயின் விழுங்குதியால் ஓரடியால் ஒளித்தியால்
திருவான நிலமகளை"

என்று கம்பநாட்டாழ்வாரும் அருளிச்செய்தபடி பகவானுடைய ஸர்வாவயவங்களாலும், விசேஷமாகத் திருவடியினாலும் தீண்டப்பெற்றவளன்றோ தரணி. இக்காரணங்களாலும், மண்ணுலகில் மாந்தர்கள் உய்வதற்கு உபாயம் நாராயணனுடைய திருவடிகளே என்று காட்டுவதற்கும் பூமி திருவடிகளிலிருந்து படைக்கப்பட்டது. இங்கு பூமி கீழிருக்கும் ஏழுலோகங்களையும் காட்டும். கீழேழுலோகங்களும் திருவடிகளிலிருந்து படைக்கப்பட்டன என்று கொள்ளவேண்டும். (திசச் ச்ரோத்ராத்) காதுகளினின்றும் திக்குகள் படைக்கப்பட்டன. சப்தத்திற்கு ஆதாரமான திக்குகள் சப்தத்தைக் கேட்கும் இந்த்ரியமான காதிலிருந்து படைக்கப்பட்டன. (தத₂ா...) அப்படியே இவ்வண்டத்திலுள்ள மற்ற உலகங்களையும் பரந்தாமனை அந்தர்யாமியாகக்கொண்ட பிரமன் படைத்தான்.' 'அகல்பயந்' என்று பன்மையாகச் சொல்லியிருப்பது சாந்தஸம் என்று கொள்ளவேண்டும்; அல்லது பிரமனை உபகரணமாகக்கொண்ட நித்யஸூரிகள் படைத்தனர் என்றும் கொள்ளலாம்.

16. வேத₃ாஹமேதம் புருஷம் மஹாந்தம்
ஆதி₃த்யவர்ணம் தமஸஸ்து பாரே
ஸர்வாணி ரூபாணி விசித்ய தீ₄ர:,
நாமாநி க்ருத்வாபி₄வத₃ந் யத₃ாஸ்தே.

[எல்லா சரீரங்களையும் உண்டுபண்ணி, பெயர்களைக் கொடுத்து அவைகளை உச்சரித்துக் கொண்டிருப்பவரும், விகாரமற்றவரும், ஸூர்யன்போன்றவர்ணத்தையுடையவரும், ப்ரக்ருதிமண்டலத்திற்கு அப்பாலிருப்பவரும், (எல்லாவிதத்திலும்) பெரியவருமான இந்தப் புருஷனை, (வேதபுருஷனாகிய) நான் அறிகிறேன்.

"வேத₃ாஹமிதி மந்த்ராப்₄யாம் வைப₄வம் கதி₂தம் ஹரே:"

['வேதாஹம்...' என்னும் இரண்டு மந்த்ரங்களாலும் ஹரியினுடைய வைபவம் வெளியிடப்பட்டது.] என்று புருஷஸம்ஹிதையில் இந்த மந்த்ரமும், அடுத்த ருக்கும், ஹரியின் வைபவத்தைச் சொல்லுகின்றனவென்று உரைக்கப்பட்டது. வேதபுருஷன் மஹாபுருஷனின் மஹிமையை மகிழ்ந்துரைக்கும் பாசுரங்களிவை. இந்த மந்திரத்தின் முதலடி ஸ்ரீராமாயணத்தில் ''அஹம்வேத்₃மி மஹாத்மாநம் ராமம் ஸத்ய பராக்ரமம்'' [நான் உண்மையான பராக்ரமத்தையுடையவனும், மஹாத்மாவுமான ராமனை அறிவேன்.] என்ற விச்வாமித்ரவாக்யத்திலுல் உபப்ரும்ஹணம் செய்யப்பட்டது என்று பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்திருக்கிறார். பரமகாருணிகரான பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்யானத்தை அனுசரித்து நாம் இங்கு விவரிக்கிறோம். ராமாயணத்தில் உபப்ரும்ஹணம் செய்யப்பட்டதால் இந்த ச்ருதி ராமனாய் அவதாரம்செய்த நாராயணனையே குறிக்கிறது என்பது தெளிவாகிறது. இந்த மந்த்ரத்தின் முற்பாதி ச்வேதாச்வதரத்திலும் சிறிது வித்தியாசத்துடன் படிக்கப்படுகிறது. இதிலிருந்து ஸர்வ வேதாந்தப்ரத்யய ந்யாயப்படி, ச்வேதாச்வதரத்தில் சொல்லப்படுபவனும், இங்கு சொல்லப்படுபவனும் ஸ்ரீமந்நாராயணனே என்று ஸித்திக்கிறது. அங்கு வியாக்யானம் செய்த ரங்கராமாநுஜமுனியும்,

''ப்ரக்ருதே: பரஸ்தாத் ஜ்யோதி: மஹாபுருஷம் தமேவ நாராயணம்
விதி₃த்வா ம்ருத்யுசப்₃தி₃தம் ஸம்ஸாரம் அதிக்ராமதி''

[ப்ரக்ருதிக்கு மேற்பட்டவனும், ஜ்யோதிர்மயமானவனும், மஹா புருஷனுமான நாராயணனையே அறிந்து 'ம்ருத்யு' என்று சொல்லப்படும் ஸம்ஸாரத்தைத் தாண்டுகிறான்.] என்று பொருளுரைத்திருக்கிறார்.

(அஹம் வேத) நான் அறிகிறேன். இங்கு 'நான்' என்று சொல்லுபவன் வேதபுருஷன். பரமாத்மாவை அறிவதினாலும், பிறரை அறியச்செய்வதினாலும் வேதமென்றே பெயரும் புகழும் பெற்ற நான் அறிகிறேன். நித்யனான நான் அறிகிறேன். அபௌருஷேயனான நான் அறிகிறேன். ப்ரமம் (தவறாக நினைத்தல்), விப்ரலம்பம் (வஞ்சனை) முதலிய குறைகளில்லாத நான் அறிகிறேன். 'வேத₃நம்' 'உபாஸநம்' என்னும் சப்தங்களால் சொல்லப்படுவதும், தைலதாரையைப் போல் இடைவிடாததும் பார்ப்பதற்கு ஸமானமானதுமான பக்தி ரூபமான ஞானமே இங்கு 'வேத₃' என்று சொல்லப்படுகிறது. வாக்யத்தினால் ஏற்படும் அர்தஜ்ஞானம் மட்டுமல்ல. (வேத) அறிகிறேன். ''ந சக்ஷுஷா க்ருஹ்யதே'' [பரமாத்மா கண்ணால் காணப் படாதவன்.] என்றும், ''மநஸா து விசுத்₃தே₄ந'' [சுத்தமான மனத்தி

னுலேயே (அறியத்தக்கவன்)] என்றும், ''என்றேனும் கட்கண்ணால் காணுத அவ்வுருவை நெஞ்சென்னும் உட்கண்ணேல் காணும் உணர்ந்து'' என்றும் சொல்லுகிறபடி வேதபுருஷன் தன்னுடைய ஞானக்கண்ணுல் கண்டு சொல்லுகிருன். ''நேதி நேதி'' [பரமாத்மா இப்படிப்பட்டவன் அல்லன்; இப்படிப்பட்டவன் ஒருவனுமில்லை.] என்றும், ''க இத்த₂ா வேத₃ யத்ர ஸ:'' [பரமாத்மா இப்படிப்பட்டவன் என்று யார் அறிவார்?] என்றும் ப்ரமாணபூதமான வேதத்திலும் பரமபுருஷன் அறியமுடியாதவன் என்று கீர்த்திக்கப்பட்டிருக்கிறது.

''ப்₃ரஹ்மருத்₃ரேந்த்₃ரபூ₄தாநாம் மநஸாமப்யகோ₃சரம்''

[ப்ரஹ்மா, ருத்ரன், இந்திரன், என்னும் இவர்களுடைய மனத்திற்கும் எட்டாதவன்] என்றும், ''நான்முகன் செஞ்சடையான் என்றிவர்கள் எம்பெருமான் தன்மையை யாரறிகிற்பார்?'' என்றும் ப்ரமாதாக்களான (அறிவுடையவர்களான) ப்ரஹ்மருத்ராதிகளாலும் அச்யுதனை அறியமுடியாதென்று அறிவிக்கப்பட்டிருக்கிறது. ''ஸோ அங்க₃ வேத₃ யதி₃ வா ந வேத₃'' [(தன் பெருமையை) அவனே அறிவனே? அறியானே?] என்றும், ''தனக்கும் தன் தன்மை அறிவரியானை'' என்றும் புருஷோத்தமன் தானும் தன் பெருமையை அறியமாட்டான் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அளவுபட்ட ஞானத்தையுடைய ப்ரஹ்மருத்ராதிகள் அறியாதது நியாயமே. ''யஸ்ஸர்வஜ்ஞ: ஸர்வவித்'' ''ஸ்வாப₄ாவிகீ ஜ்ஞாந ப₃லக்ரியா ச'' என்னும் ப்ரமாணங்களை நம்பி ஸார்ஜ்ஞ்யம் கொண்டாடி ஒரு ஆசாரியன்பக்கல் அடிபணிந்து அறியாமையால் அவனும் அறியான். வேதம் அறிந்தபடி எப்படி என்னில்: (மஹாந்தம்) அளவிடமுடியாதவனென்றே அறிந்தது. ''அறிந்தன வேதவரும் பொருள் நூல்கள் அறிந்தன கொள்க அரும்பொருளாதல்'' என்றும், ''யஸ்யாமதம் தஸ்ய மதம்'' [எவனுக்கு பரமபுருஷனை (அளவிட்டு) அறியமுடியவில்லையோ அவனே அறிந்தவனுகிருன்.] என்றும் சொல்லியபடி அளவிடமுடியாதவன் என்று அறிகையே உள்ளபடி அறிவது. ''வேதாஹம்'' என்பதை ராமாயணத்தில் ''அஹம் வேத்மி'' என்பது விவரிக்கிறது. இங்கு 'வேத' என்பது அங்கு 'வேத்மி' என்றும், இங்கு 'அஹம்' என்பது அங்கு 'அஹம்' என்றும் சொல்லப்படுகிறது.

(ஏதம் வேத₃) இப்படி ப்ரஸித்தமானவனை அறிகிறேன். ஸர்வகாரணபுருஷனுயிருந்தும், மனிசர்க்காகப் படாதனபட்டு என்நின்ற யோனியுமாய்ப் பிறந்த இவனை அறிகிறேன். அவதார ஸௌலப்யத்தைக் காட்டுவது இந்த ஏதச்சப்தம். இங்கு 'ஏதம்' என்பதை அங்கு 'ராமம்' என்று அவதாரநிர்தேசம் செய்கிறது. (புருஷம்)

அவன் ஓருவனே புருஷன் எனத்தகுந்தவன். மற்றவர்கள் ஸ்த்ரீ ப்ராயர்களே. ஸகல கல்யாணகுணங்களாலும் பூர்ணமானவன் புருஷன். இங்கு சொல்லப்படும் சௌர்யவீர்யாதிகுணங்கள் ராமாயணத்தில் 'ஸத்யபராக்ரமம்' என்று பேசப்படுகின்றன. 'புரி சேதே' என்ற வ்யுத்பத்தியின்படி வைகுண்டத்தில் ஆதிசேஷன்மேல் பள்ளிகொண்ட புருஷன் என்றும் பொருள்கொள்ளலாம். (ஏதம் புருஷம்) 'அங்கு$_3$ஷ்ட்ட$_2$மாத்ர: புருஷோந்தராத்மா ஸதா ஜநாநாம் ஹ்ருத$_3$யே ஸந்நிவிஷ்ட:'' [கட்டைவிரல் பரிமாணமுள்ளவனும், அந்தர்யாமியுமான புருஷன் ஜனங்களுடைய ஹ்ருதயத்தில் எப்பொழுதும் இருக்கிருன்.] என்று சொல்லுகிறபடி எல்லா ஜனங்களுடைய ஹ்ருதயபுரத்திலும் வசிப்பவன் புருஷன் என்றும் பொருள்கொள்ளலாம். தேசாந்தரத்தில் எட்டியிராமல் அருகில் அந்தர்யாமியாயிருப்பதால் 'இந்தப் புருஷன்' என்று சொல்லப்படுகிருன். அவன் பரவஸ்துவாயிற்றே யென்று நாம் பயப்படவேண்டியதில்லே. அருவருக்கும்படியான தோஷங்களுக்கு இவர்கள் ஒரு கொள்கலமாயிற்றே என்று அவன் அகலநிற்கமாட்டான். அவனிடம் நாம் முறையிடும்போது முன்வருவதற்காக அருகிலேயே அமர்ந்திருப்பவன். (மஹாந்தம்) இதை அனுஸரித்து ஸ்ரீராமாயணத்தில் 'மஹாத்மானம்' எனப்படுகிறது. மிகவும் பெரியவனென்று அறிவேன். ''ஸ உ ச்ரேயாந் ப$_4$வதி ஜாயமாந:'' [அந்தப் புருஷோத்தமன் பிறந்தபின்பே பெரியவனுகிருன்.] என்று தாழ்ந்தார்க்கு முகங்கொடுக்கைக்காகப் பல அவதாரங்கள் செய்தபின்பு அவனைப் பெரியவனென்று அறிகிறேன். எல்லா விதத்திலும் பெரியவன் பரமபுருஷன். (மஹாந்தம்) ஸ்வரூபத்தில் பெரியவன் இவன் ஒருவனே. எங்கும் பரந்துளன். (மஹாந்தம்) குணங்களில் பெரியவன். கணக்கற்ற கல்யாணகுணங்களையுடையவன். ஒவ்வொரு குணமும் அளவிடமுடியாதது. ஆனந்தகுணம் ஒன்றைமட்டும் அளவிடப்பார்த்த வேதம் ''யதோ வாசோ நிவர்த்தந்தே'' என்று கைவிட்டுத் திரும்பி வந்ததல்லவோ? 'எல்லையில் ஞானத்தன்' என்று ஆழ்வார் அருளிச்செய்தபடி அளவற்ற ஞானத்தையுடையவன்; பலத்தில் பெரியவன்; ஐச்வர்யத்தில் பெரியவன்; வீர்யத்தில் விஞ்சியன்; சக்தியில் சிறந்தவன்; தேஜஸ்ஸில் மிக்கவன்; பிறருடைய துக்கத்தைக்கண்டு ஐயோவென்று இரங்கும் தயையையுடையவன். அடியார்களின் தோஷத்தை அறியாதவன். தன்னடியார்களின் தோஷங்களை குணங்களாகக் கொள்ளும்படியான வாத்ஸல்யத்தையுடையவன். ''செய்தாரேல் நன்றுசெய்தார்'' என்றல்லவோ அவன் வார்த்தை.''அப$_4$யம் ஸர்வபூ$_4$தேப்$_4$யோ த$_3$த$_3$ாம்யேதத் வ்ரதம் மம'' [(என்னை சரணமடைந்தவனுக்கு) எல்லா பூதங்க

ளிடமிருந்தும் அபயமளிக்கிறேன். இதுவே என்னுடைய விரதம்.] என்று சொல்லி ஆபத்தில் அகப்பட்டவர்களை அஞ்சலென்று அளிக்கும் அரிய பெரிய ஸ்வபாவத்தையுடையவன். பெரிய விரோதிகளையும் புழுப்பூச்சிகளை நசுக்குவதுபோல் நசுக்கவல்ல பராக்ரமத்தையுடையவன். 'ஜயிப்பரோ? தோற்பரோ?' என்னும் ஸந்தேஹம் இவருடைய பராக்ரமவிஷயத்தில் கிடையாது. "நாவிஜித்ய நிவர்த்ததே" என்றும் "சென்று கொன்று வென்றிகொண்ட" என்றும் சொல்லுகிறபடி புறப்பட்டால் ப்ரபல விரோதிகளையும் பராஜயப்படுத்தித் தலையறுத்தல்லது மீளார். (மஹாநந்தம்) பெருமையுள்ள சரீரத்தையுடையவன். "மாசூணுச் சுடருடம்பாய்" என்றும், "ந தஸ்ய பராக்ருதா மூர்த்தி: மாம்ஸமேதோ₃ஸ்தி₂ஸம்ப₄வா" அந்த மஹாபுருஷனுக்கு மாம்ஸங்களாலும், கொழுப்பினாலும், எலும்புகளாலுமான ப்ராக்ருதசரீரம் கிடையாது.] என்றும், "நித்யம் நித்யாக்ருதித₄ரம்" [நித்யமானவனும், நித்யமான திவ்யமங்களவிக்ரஹத்தையுடையவனும்] என்றும் சொல்லப்பட்ட நித்ய நிரவத்ய நிரதிசய ஔஜ்வல்யமுடைய (என்றும் குற்றமற்றதும் ஒப்பற்ற ஒளியையுடையதுமான) சரீரத்தையுடையவன். எல்லா அண்டங்களிலுமுள்ள ஸகல சேதநாசேதனங்களையும் சரீரமாக உடையவனாதலால் பெரிய சரீரத்தையுடையவன் என்றும் பொருள்கொள்ளலாம். (மஹாநந்தம்) பரமாத்மாவாயிருப்பவன். "யஸ்மாத் பரம் நாபரமஸ்தி கிஞ்சித்" [எவனைக்காட்டிலும் பெரியவஸ்து வேறொன்றும் கிடையாதோ.] என்றும், "ந தத்ஸமச்ச அப்₄யதி₄கச்ச த்₃ருச்யதே" [அவனுக்கு ஸமானமானவனும், மேலானவனும் காணப்படவில்லை.] என்றும், "தமீச்வராணும் பரமம் மஹேச்வரம், தம் தே₃வதாநாம் பரமம் ச தை₃வதம்" [ஈச்வரர்களுக்கும் மேலான ஈச்வரனும், தேவதைகளுக்கும் மேலான தேவதையுமான அவனை] என்றும், "ஒத்தார் மிக்காரை இலையாய மாமாயா!" என்றும் சொல்லுகிறபடி தேவாதிதேவனாய், ஆதிமூலமாய், அந்தர்யாமியாயிருப்பவன்.

(ஆதி₃த்யவர்ணம்) ஸூர்யனைப்போன்ற ஒளியையுடையவன். கோடிஸூர்யப்ரகாசத்தையுடைய பரஞ்சோதிக்கு அல்பப்ரகாசத்தையுடைய ஆதித்யனை உபமானமாகச் சொல்லலாமோ? எனில்: நாம் கண்ணால் காணும் ஜ்யோதிஸ்ஸுகளுக்குள் ஸூர்யனே மிகுந்த ஒளியுடையவனாகக் காணப்படுவதால் அவனே உபமானமாகச் சொல்லப்பட்டான். "ய ஏஷ அந்தராதி₃த்யே ஹிரண்மய: புருஷ:" [ஸூர்யனுக்கு நடுவில் ஸுவர்ணம் போன்ற ஒளியையுடைய புருஷன்] என்று பரமபுருஷன் வர்ணிக்கப்பட்டானன்றோ. இந்த மஹாபுருஷனையே "ஸவிதுர் வரேண்யம்" என்று காயத்ரியில் அனு

சந்திக்கிறோம். ''மலர்கதிரின் சுடருடம்பாய்'' என்று ஆழ்வாரும் அருளினர். வேதங்களும், வைதிகபுருஷர்களும் இவனைப்பேசப் புக்கால் ஸூர்யனுக்கு ஒப்பான ஒளியையுடையவன் என்றே பாசுர மிடுகிறார்கள். (தமஸஸ்து பாரே) தமஸுக்கு அக்கரையிலிருப்பவன். ''தமஸ: பரமோ தா₄தா சங்க₂சக்ரக₃தா₃த₄:ர'' என்று மண்டோதரியால் சொல்லப்பட்ட சக்ரபாணியே இவன். 'தம:' என்பது மூலப்ரக்ருதி யைக் குறிக்கிறது. ப்ரக்ருதி மண்டலத்திற்கு அப்பாலிருப்பவன் என்று பொருள். 'தம:' என்பது அஜ்ஞானத்தையும் ஸம்ஸாரத் தையும் குறிக்கும். ''ஸோத்₄வந: பாரமாப்நோதி தத்₃ விஷ்ணோ: பரமம் பத₃ம்'' [அவன் ஸம்ஸாரத்திற்கு அக்கரையை அடைகிறான். அதுவே விஷ்ணுவினுடைய பரமபதம்] என்று கடோபனிஷத்தில் சொல்லப் பட்டிருப்பதிலிருந்து இங்கு சொல்லப்பட்டதும் விஷ்ணுவினுடைய பரமபதமே என்று நிஸ்ஸந்தேஹமாக நிச்சயிக்கப்படுகிறது. (ஸர்வாணி...) சேதனர்கள் ''லூநபக்ஷ இவாண்ட₃ஜ:'' என்று சிற கொடிந்த பக்ஷிபோல் அசித்ஸமராய், கரணகளேபரமற்று போக மோக்ஷசூந்யராய் இருக்கும்படியான எளிவரவைக்கண்டு தயை யுடைய மனஸ்ஸையுடையவனாய் அவர்கள் தன்னை அடைவதற்காக சரீரங்களைக் கொடுத்து நாமரூபங்களை ஏற்படுத்தினான். (ஸர்வாணி ரூபாணி விசித்ய) தேவர், மனுஷ்யர், திர்யக் (ஊர்வன) ஸ்தாவரம் எனப்படும் நான்குவிதமான சரீரங்களையும் ஏற்படுத்தி. (நாமாநி க்ருத்வா...) அவர்களுக்கு நாமங்களைக்கொடுத்து அவற்றை உச்சரித்துக்கொண்டு எந்தப்பரமாத்மா இருக்கிறாரோ அவரை அறிவேன். ''அநுப்ரவிச்ய நாமரூபே வ்யாகரவாணி'' [இவற்றை வியாபித்து நாமரூபங்களைக் கொடுக்கக்கடவேன்] என்று பரம புருஷன் ஸங்கல்பிப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறதன்றோ. (தீ₄ர:) இம்மாதிரியாக இவற்றை வியாபித்து இவற்றுக்கு நாமரூபங்களைக் கொடுத்தபோதிலும் அவற்றின் விகாரங்கள் தன்மேல் படாதபடி யிருப்பதால் புருஷோத்தமன் 'தீ₄ர:' என்று சொல்லப்படுகிறான். புத்தியை ரமிக்கச்செய்பவன் என்றும் பொருள் கொள்ளலாம். 'யத்' என்கிறவிடத்தில் நபும்ஸகலிங்கம் சாந்தஸம்.

இதிலிருந்து உண்மையான தத்வமான வேதம் ஒன்றிருக்கிற தென்று அறிகிறோம். 'புருஷம்' என்பதிலிருந்து பரமாத்மாவுக்கு குணங்களிருக்கின்றனவென்று ஏற்படுகிறது. 'மஹாந்தம்' என்பதி லிருந்து அவனுக்குக் கீழ்ப்பட்டவர்கள் உளர் என்று உணர்த்தப் படுகிறது. 'ஆதி₃த்யவர்ணம்' என்பதிலிருந்து அஸாதாரணமான திவ்யமங்களவிக்ரஹத்தையுடையவன் என்றும் தெரிவிக்கப்படு

கிறது. ''தமஸஸ்து பாரே'' என்று அப்ராக்ருதமான திவ்யதேசத்தில் திகழ்கின்றான் தாமோதரன் என்றும் ஏற்படுகிறது. அநேக சேதனர்கள் உண்மையாக இருக்கின்றனரென்றும் அவர்களுக்கு நாமரூபங்களைக் கொடுத்தான் என்பதும் அறியப்படுகிறது. இவை களை ஒப்புக்கொண்டால் அத்வைதம் அழிந்துவிடும் என்னும் பயத்தினால் வேதம் வாஸ்தவமல்லவென்றும், புருஷோத்தமனுக்கு ரூபமில்லை, குணமில்லை, ஸ்தானமில்லை என்றும் சேதனாசேதநங்கள் உண்மையல்லவென்றும், மாயையினால் ஏற்படும் தோற்றமே யென்றும் சொல்லும் மாயாவாதிகளின் மதம் முழுவதும் இங்கு மறுக்கப்பட்டது.

17. த₄ாதா புரஸ்தாத்₃ யமுத₃ாஜஹார
சக்ர: ப்ரவித்₃வாந் ப்ரதி₃சச்சதஸ்ர:
தமேவம் வித்₃வாந் அம்ருதஇஹப₄வதி
நாந்ய: பந்தா₂: அயநாயவித்₃யதே.

[எவரை முன் பிரமதேவர் தியானித்தாரோ, பரமாத்ம ஜ்ஞானியான இந்திரன் எவரை உபாஸித்தானோ, எட்டு திக்பாலகர்களும் (ருஷிகளும்) எவரை தியானம் செய்தனரோ அந்தப்பரமபுருஷனை இம்மாதிரியாக அறிபவன் இந்த ஜன்மத்திலேயே முக்தியடைகிறான். மோக்ஷத்திற்கு வேறு வழியில்லை.]

வேதபுருஷன் தன்னைத்தவிர மற்றும் சிலரும் இந்த மஹா புருஷனை அறிந்துள்ளார்களென்று வெளியிட்டு அவனை இம்மாதிரி அறிவதே மோக்ஷோபாயம் என்று நிர்ணயிக்கிறான். (த₄ாதா...) முதலில் ஸ்ருஷ்டிக்கப்பட்ட பிரமன் மஹாபுருஷனை தியானித்தார் என்று சொல்லப்படுகிறது. ஸ்ருஷ்டிக்குமுன் ஸ்ருஷ்டிசெய்ய வழி தெரியாத நான்முகன் பகவானை நோக்கி தியானம் செய்தாரென்று இதிலிருந்து ஏற்படுகிறது.

''யுக₃கோடி ஸஹஸ்ராணி விஷ்ணுமாராத்₄ய பத்₃மபூ₄:
புநஸ் த்ரைலோக்யதா₄த்ருத்வம் ப்ராப்தவாநிதி சுச்ரும:''

[பிரமன் ஆயிரங்கோடியுகங்கள் விஷ்ணுவை ஆராதித்து, அடுத்த கல்பத்திலும் ப்ரஹ்மபட்டத்தை அடைந்தான் என்று கேள்விப்படு கிறோம்.] என்று சொல்லப்பட்டபடி தன் பதவிக்காகச் சென்ற கல்பத்தில் பிரமன் புருஷோத்தமனைத் தியானித்தார் என்றும் பொருள்கொள்ளலாம். (சக்ர:...) நூறு அச்வமேதயாகங்கள் செய்து

பகவானை ஆராதித்து இந்திரப்பதவியை அடைந்தான் இந்திரன். அடுத்த மன்வந்தரத்தில் இந்திரப்பதவியை அடையப்போகும் மஹாபலியும் அம்மாதிரியே பகவானை உபாஸித்திருக்கிறார். (ப்ர திச:...) 'சதஸ்ர:' என்று கிழக்கு முதலிய நான்கு திக்குகளும் 'ப்ரதிச:' என்று தென்கிழக்கு முதலிய விதிக்குகளும் சொல்லப்படுகின்றன. இந்த எட்டுத் திக்குகளுக்கும் பாலகர்களும், இந்த திக்குகளிலுள்ள ரிஷிகளும் இப்பதங்களால் உணர்த்தப்படுகின்றனர். அவர்களும் புருஷோத்தமனை உபாஸிக்கிறார்களென்று ஏற்படுகிறது. ஈசான்ய திக்கிற்கு அதிபதியும் அங்கு வாஸம் செய்பவருமான சிவனும் இந்தப் பரமபுருஷனையே உபாஸனை செய்கிறார் என்றும் ஏற்படுகிறது.

நம்மாழ்வாரும் இதையே,

**"கள்வா! எம்மையும் ஏழுலகும் நின்**
**உள்ளே தோற்றிய இறைவ!' என்று**
**வெள்ளேறன் நான்முகன் இந்திரன் வானவர்**
**புள்ளூர்திகழல் பணிந்து ஏத்துவரே"**

[வெள்ளேறன்—வெளுத்த காளையை வாஹனமாகவுடைய சிவன். புள்ளூர்தி—கருடவாஹனன்.] என்று அருளிச்செய்தார். அத்ரி, ப்ருகு, காச்யபர், கர்தமர், தக்ஷர், வஸிஷ்டர், நாரதர், வால்மீகி, பராசரர், வியாஸர், சுகர், சௌநகர், யாஜ்ஞவல்க்யர் முதலிய ரிஷிகளும் இந்த இருடீகேசனையே ஏத்துகிறார்கள் என்றும் சொல்லப்படுகிறது. (தம்) இப்படிப்பட்ட ப்ரஸித்தமான பரமாத்மாவான நாராயணனை. (ஏவம் வித்வாந்) இம்மாதிரியாக அறிபவன். ஸர்வகாரண பூத னென்றும், ஸர்வரக்ஷகனென்றும், ஸமஸ்தகல்யாணகுணாத்மக னென்றும், ஸ்ரீவைகுண்டவாஸனென்றும், அஸாதாரணமான திவ்ய மங்களவிக்ரஹமுடையவனென்றும், சேதனர்களுக்கு நாமரூபங் களையும், கரணகளேபரங்களையும் கொடுப்பவனென்றும், பிரமன், ருத்ரன், இந்திரன், முதலியவர்களால் பூஜிக்கப்படுபவனென்றும் அறிபவன். இங்கு 'அறிவு' என்பது தியானரூபமான அறிவையே காட்டுகிறது. (அம்ருத...) * இந்த ஜன்மத்திலேயே பிறப்பிறப்பாகிற

---

* ப்ராரப்தகர்மம் எந்த ஜன்மத்தில் முடிகிறதோ, அந்த ஜன் மத்திலேயே மோக்ஷம் என்பது சாஸ்திரார்த்தமாயிருக்க, 'இந்த ஜன்மத்திலேயே' என்றது எப்படியெனில்: 'ஏதம் புருஷம்' என்று அவதாரத்தைக்காட்டுகையால், அவதார ரஹஸ்யஜ்ஞாநத்தோடு கூடிய பக்தியாலே இந்த ஜன்மத்திலேயே மோக்ஷமடைகிறான் என்பது "புநர்ஜந்ம நைதி" [கீதை] முதலான ப்ரமாணங்களில் உணர்த்தப்பட்டதாகையாலே விரோதமில்லை.

ஸம்ஸாரஸாகரத்தைத் தாண்டுகிருன். இந்த உலகத்திலேயே முக்த னுக்கு ஸமானமாக ஆகிருன் என்றும் பொருள்கொள்ளலாம். நம் மாழ்வாரும், "பிடித்தேன் பிறவி கெடுத்தேன் பிணி சாரேன்" என்று பரந்தாமனின் பாதங்களைப் பிடித்தவுடன் பிறப்பு இறப்பு முதலிய ஸகல துக்கங்களும் நீங்குகின்றன என்றல்லவோ அருளினுர். நாரா யணனை அடிபணிந்து, பல்லாண்டுபாடி, ஆனந்தஸாகரத்தில் அமிழ்ந்து "அச்சுவை பெறினும் வேண்டேன்" என்று சொல்லுபவர் களை முக்தர்கள் என்று சொல்லத் தட்டில்லை. அவர்கள் கலிதன்னைக் கடக்கப் பாய்ந்தவர்களே. (நாந்ய:...) மோக்ஷமடைவதற்கு வேருெரு மார்க்கமும் கிடையாது. 'அயநாய' என்றவிடத்தில் 'பரம பதமடைவதற்கு' என்று ச்வேதாச்வதரோபநிஷத்பாஷ்யத்தில் சங்கரர் வியாக்யானம் செய்தார். இவ்விடத்தில்,

**"நாயமாத்மா ப்ரவசநேந லப்₄ய: ந மேத₄யா ந ப₃ஹு₂நா ச்ருதேந**
**யமேவைஷ வ்ருணுதே தேந லப்₄ய: தஸ்யைஷ ஆத்மா**
**விவ்ருணுதே தநூம் ஸ்வாம்"**

[இந்தப் பரமாத்மா (பக்தியில்லா) ச்ரவண மனன தியானங்களால் அடையத்தக்கவனல்லன்; எவனை இப்பரமபுருஷன் வரிக்கிருனே அவனுக்கே தன் ஸ்வரூபத்தைக் காட்டுகிருன்.]

**"ந கர்மணு ந ப்ரஜயா த₄நேந த்யாகே₃ந ஏகேந அம்ருதத்வமாநசு:"**

[கர்மத்தினுலும், ப்ரஜையினுலும், தனத்தினுலும், மோக்ஷமடைய முடியாது. ந்யாஸவித்யை (சரணுகதி) யினுலேயே (பலர்) மோக்ஷ மடைந்தனர்.] என்னும் ச்ருதிவாக்யங்கள் அனுஸந்திக்கத்தக்கன. கீதாசார்யனும்,

**"நாஹம் வேதை₃ர் ந தபஸா ந தா₃நேந ந சேஜ்யயா**
**சக்ய ஏவம்விதே₄ா த்₃ரஷ்டும் த்₃ருஷ்டவாநஸி மாம் யதா₂**
**ப₄க்த்யா த்வநந்யயா சக்ய: அஹமேவம் விதே₄ார்ஜு₂ந"**

[அர்ஜு₂ன! (என்னிடத்தில் பக்தியற்ற) வேதாத்யயனத்தாலும், தபஸ்ஸு₂களாலும், தானத்தினுலும், யாகத்தினுலும், நீ என்னைக் கண்டதுபோல், நான் (எவராலும்) காணத்தக்கவனல்லன். அனன்ய ப்ரயோஜனமான பக்தியினுலேயே காணத்தக்கவன்.] என்று அருளிச்செய்தாரன்றே.

இந்த மந்த்ரத்தில், பிரமன், இந்திரன் முதலிய பலர் பரமாத்மாவை உபாஸிப்பதாகச் சொல்லப்படுவதிலிருந்து ஜீவாத்மாக்கள் பலருண்டென்பது ஸித்திக்கிறது. 'தம் ஏவம் வித்$_3$வாந்' என்பதிலிருந்து அறியப்படுபவன், அறிவு, அறிகிறவன் என்னும் மூன்றும் உண்டென்று உணர்த்தப்படுகிறது. 'ஏவம்' என்பதிலிருந்து மேலே சொன்னபடி ஸமஸ்தகல்யாணகுணஸம்பன்னனென்றும், விக்ரஹ விபூதி விசிஷ்டனென்றும் அறியவேண்டும் என்று அறிவிக்கப்படுகிறது. 'விக்ரஹமில்லை; விபூதியில்லை; குணமில்லை' என்பவருடைய பிடரியைப் பிடித்துப் புறக்கணிக்கிறது இவ்வாக்கியம். 'ஏவம் வித்$_3$ வாந்' என்பதை கீதாசார்யன் 'ஏவம்விதே$_4$ா த்$_3$ரஷ்டும்' [இம்மாதிரி காண்பதற்கு] என்றும், 'ப$_4$க்த்யா' என்றும் விவரித்தபடியால் இங்கு சொல்லப்படும் அறிவு காண்பதற்கு ஸமானமான பக்தியே என்று ஏற்படுகிறது. ஆகையால் வாக்யார்த்தஜ்ஞானத்தினுல் மோக்ஷமடையமுடியாதென்றும் ஸித்திக்கிறது. 'அம்ருதோ ப$_4$வதி என்பதிலிருந்து ஸம்ஸாரி, முக்தன் என்னும் பேதமுண்டென்றும் தெரிவிக்கப்படுகிறது.

18. யஜ்ஞேந யஜ்ஞமயஜந்த தே$_3$வா:
தாநி த$_4$ர்மாணி ப்ரத$_2$மாந்யாஸந்
தே ஹ நாகம் மஹிமாநஸ் ஸசந்தே
யத்ர பூர்வே ஸாத்$_4$யாஸ் ஸந்தி தே$_3$வா:.

[நித்யஸூரிகள் பிரமனை உபகரணமாகக்கொண்டு ஸ்ருஷ்டிரூபமான யஜ்ஞத்தைச் செய்தார்கள். அந்த யஜ்ஞம் முதலிய தர்மங்கள் முக்யங்களாக ஆயின. இவ்விதமாக அறிபவர்கள் மஹிமையுடையவர்களாய் பழைமையானவர்களான நித்யஸூரிகள் வாஸம் செய்யும் பரமபதத்தை அடைகிருர்கள்.]

இந்த மந்த்ரத்தின் பூர்வார்த்தத்தில் இந்த அனுவாகத்தில் சொல்லப்பட்ட ஸ்ருஷ்டிப்ரகாரமும் பின் பாதியில் 'வேத$_3$ாஹம்' என்னும் இரண்டு மந்த்ரங்களினுல் சொல்லப்பட்ட பகவதுபாஸனமும் அதின் பலமும் சொல்லப்படுகின்றனவென்று வித்யாரண்யர். 'நாராயணம்' என்று ப்ரஸித்தமான புருஷஸூக்தத்தின் பூர்வானுவாகம் இந்த ருக்குடன் முடிவடைகிறது. (யஜ்ஞேந...) யஜ்ஞத்திற்கு முக்ய ஸாதனமான பிரமனைக்கொண்டு நித்யஸூரிகள் ஸ்ருஷ்டிரூபமான யஜ்ஞத்தைச் செய்தனர். (தாநி...) அதுமுதல் அந்த யஜ்ஞம் தானம் முதலிய தர்மங்கள் முக்யமானவையாக

ஆயின. தர்மார்த்த காமமோக்ஷம் எனப்படும் நான்கு புருஷார்த்தங்களுக்கும் ஸாதனமாயிருக்கின்றன. கீதையில்,

"ஸஹ யஜ்ஞை: ப்ரஜாஸ் ஸ்ருஷ்ட்வா புரோவாச ப்ரஜாபதி:
அநேந ப்ரஸவிஷ்யத்$_4$வம் ஏஷ வோஸ்த்விஷ்டகாமது$_4$க்"

[யஜ்ஞங்களுடன் கூட, ப்ரஜைகளை முன் ஸ்ருஷ்டித்து, பகவான் பின்வருமாறு சொன்னார்:—இந்த யஜ்ஞத்தைக்கொண்டு வ்ருத்தியடையுங்கள். இது நீங்கள் விரும்பியதையெல்லாம் கொடுக்கக்கடவது.] என்று சொல்லப்பட்டது இங்கு அனுஸந்திக்கத்தக்கது. (தேஹ...) இந்த ஸ்ருஷ்டிரூபமான யஜ்ஞத்தை அறிந்து அர்தத்துடன் அனுஸந்திப்பவர்கள், ஸனதனிகரான ஸாத்யர்களென்னும் பெயரையுடைய நித்யஸூரிகள் வாழும் வைகுண்டத்தை மஹிமையுடையவர்களாய் அடைகிறார்கள். (நாகம்) 'நாகஸ்ய ப்ருஷ்டே$_2$' என்று நாராயணவல்லியில் சொல்லப்பட்ட வைகுண்டமே இங்கு சொல்லப்படுகிறது. (மஹிமான:...) ஜ்ஞானஸங்கோசமில்லாதவர்களாக அனந்தகருடவிஷ்வக்ஸேனாதிகளிருக்கும் பரமபதத்தை அடைகிறார்கள்.

"ஒளிக்கொண்ட சோதியமாய் உடன் கூடுவதென்றுகொலோ..?
அளிக்கின்ற மாயப்பிரான் அடியார்கள் குழாங்களையே"

என்று ஆழ்வாரால் பிரார்த்திக்கப்பட்ட பலத்தைப் பெறுவார்கள். இதிலிருந்து ஸாத்யதேவர்களென்று சிலர் இருக்கிறார்களென்றும் அவர்கள இருக்குமிடத்தையடைவதே மோக்ஷமென்றும் ஏற்படுகிறது. ஸாத்யர்-ப்ராப்யர்.

## உத்தரானுவாகம்.

1. அத்$_3$ப்$_4$யஸ் ஸம்பூ$_4$த: ப்ருதி$_2$வ்யை ரஸாச்ச
விச்வகர்மணஸ் ஸமவர்த்ததாதி$_4$
தஸ்ய த்வஷ்டா வித$_3$த$_4$த்$_3$ ரூபமேதி
தத்புருஷஸ்ய விச்வமாஜாநமக்$_3$ரே.

[உலகம் ஜலத்தினின்றும் உண்டாயிற்று. பூமியிலுள்ள அன்ன ரஸத்தினால் விருத்தியடைந்தது. பரமபுருஷனிடத்திலிருந்து உண்டாயிற்று. புருஷோத்தமன் அதை தரித்துக்கொண்டு வியாபிக்கிறான். ஆகையால் இவ்வுலகமெல்லாம் மஹாபுருஷனுக்கு சேஷமாயிருப்பது என்று முன்னமே அறிந்தேன்.]

(அத்ப்யஸ் ஸம்பூத:) உலகம் நீரிலிருந்து உண்டாயிற்று என்று சொல்லப்படுகிறது. மஹோபனிஷத்தில்,

''அத₂ புநரேவ நாராயணஸ் ஸோங்யம் காமம் மநஸா த்₄யாயீத
தஸ்ய த்₄யாநாந்தஸ்த₂ஸ்ய லலாடாத் ஸ்வேதே₃ாபதத் தா இமா
ஆப: தத் ஹிரண்மயமண்ட₃மப₄வத்''

[பிறகு, நாராயணன் மற்றொரு ஸங்கல்பத்தை மனத்தினால் செய்தார்: ஸங்கல்பம் செய்தவுடன் அவருடைய நெற்றியிலிருந்து வேர்வை விழுந்தது. அதுவே இங்கு காணப்படும் தண்ணீர். அதில் ஹிரண்மயமான அண்டம் உண்டாயிற்று.] என்று சொல்லப்பட்டது இங்கு உணர்த்தப்படுகிறது. இதுவே 'அப ஏவ ஸஸர்ஜாதௌ₃ள...தத₃ண்ட₃மப₄வத் ஹைமம்' [நாராயணன் தண்ணீரை முதலில் படைத்தான். அதில் பொன்மயமான அண்டமுண்டாயிற்று.] என்று மனுஸ்ம்ருதியிலும் உரைக்கப்பட்டது. ஆழ்வாரும் ''தானோர் பெருநீர் தன்னுள்ளே தோற்றி'' என்று அருளிச்செய்தார். (ப்ருதிவ்யை ரஸாச்ச ஸம்பூத:) பூமியிலிருந்து உண்டான அன்னரஸங்களினால் வ்ருத்தியடைந்தது. (விச்வகர்மண:...) பரமாத்மாவினிடமிருந்து இவை உண்டாயின. ஜலத்திலிருந்தும் பூமியிலிருந்தும் தானாகவே உண்டாகவில்லை என்று உணர்த்துவதற்காக உலகத்தை உண்டாக்கிய உத்தமனால் கர்மானுகுணமாக உயர்வுதாழ்வுகளுடன் உண்டாக்கப்பட்டன வென்று உரைக்கப்படுகிறது. மஹோபனிஷத்தை அனுஸரித்து, இங்கு சொல்லப்படும் 'விச்வகர்மா' முதலிய சப்தங்கள் நாராயணனையே குறிக்கின்றனவென்று அறிகிறோம். (தஸ்ய...) ஸர்வேச்வரன் அந்த உலகத்தை தரித்துக்கொண்டு வியாபிக்கிறான். த₄ாதா-நாராயண:' என்றல்லவோ ஸுபாலோபனிஷத்தில் இம்மஹாபுருஷன் கீர்த்திக்கப்பட்டான். (தத்புருஷஸ்ய விச்வம்) ஆகையினால் இவ்வுலகம் புருஷனுடையதே. உலகம் உடமை. உடையவன் புருஷோத்தமன். 'க்ருஷ்ணஸ்ய ஹி க்ருதே பூ₄தமித₃ம் விச்வம் சராசரம்' [சராசரமான ஜீவராசிகளெல்லாம் க்ருஷ்ணனுடையதன்றோ?] என்னும் ஸ்ம்ருதிவசனம் இந்த ச்ருதியை விவரிக்கிறது. (ஆஜாநம் அக்ரே) 'பகவானுக்கு சேஷபூதமானது இவ்வுலகம் என்பதை நான் முன்னமே அறிந்தேன்' என்று வேதபுருஷன் வெளியிடுகிறான். பகவான் உலகத்தை உண்டாக்கி, தரித்து, வியாபிப்பதாகச் சொல்லுகிறபடியாலும் உலகத்தை உடையவன் என்று உரைக்கிறபடியாலும் விசிஷ்டாத்வைதவேதாந்தமே வேதத்தின் உட்பொருள் என்பது நன்கு விளங்குகிறது.

2. வேத₃ாஹமேதம் புருஷம் மஹாந்தம், ஆதி₂த்யவர்ணம் தமஸ: பரஸ்தாத்
தமேவம் வித்₃வாந் அம்ருத இஹ ப₄வதி, நாந்ய: பந்த₂ா வித்₃யதேயநாய

'அண்டக்குலத்துக்கதிபதியாகி, அண்டத்திற்கு அப்புறத்தி லுள்ள சுத்தஸத்வமயமான ஸ்ரீவைகுண்டத்தில் கோடிஸூர்ய ப்ரகாசத்துடன் எழுந்தருளியிருக்கும் இந்த மஹாபுருஷனை நான் அறிகிறேன்; அவனே உபாயமும், உபேயமும் என்று அறிபவன் இந்த ஜன்மத்திலேயே மோக்ஷமடைகிறான். மோக்ஷத்திற்கு வேறு மார்க்கமில்லை' என்னும் இந்த ரஹஸ்யார்த்தத்தை வேதம் ஆதராதி சயத்தினால் மறுபடியும் உத்கோஷிக்கிறது. இதன் பொருள் பூர்வானு வாகத்தில் விசேஷமாக விவரிக்கப்பட்டது. பூர்வானுவாகத்தில் 16-வது மந்த்ரத்தின் முற்பாதியும், 17-வது மந்த்ரத்தின் பிற் பாதியும் காண்க.

3. ப்ரஜாபதிச் சரதி க₃ர்ப்பே₄ அந்த:, அஜாயமாநோ ப₃ஹுதா₄ விஜாயதே
தஸ்ய தீ₄ரா: பரிஜாநந்தி யோநிம், மரீசீநாம் பத₃மிச்ச₂ந்தி வேத₄ஸ:

[பரமபுருஷன் ஹ்ருதயத்தில் அந்தர்யாமியாய் ஸஞ்சரிக்கிறான். உத் பத்தியில்லாத புருஷோத்தமன் பலபடியாகப் பிறக்கிறான். அவ னுடைய அவதாரங்களை தீரர்களே அறிகிறார்கள். (அவர்கள்) பரம புருஷன் வாழும் நித்யஸூரிகளின் நாட்டை விரும்புகிறார்கள்.]

"ததோ விஷ்வங் வ்யக்ராமத் ஸாசநாநசநே அபி₄" என்று பூர் வானுவாகத்தில் சொல்லப்பட்ட அவதாரவைபவம் இங்கு அனுப விக்கப்படுகிறது.

"விஷயஸ்யாதிபூ₄மித்வாத் ஜ்ஞாநதௌ₃ஷ்கர்யசங்கிநாம்
அவதாரேண ஸௌலப்₄யம் த்ரிஷ்டுபே₄ாக்தம் த்ருதீயயா"

[பகவத்ஸ்வரூபமானது அறிவிற்கெட்டாதபடியால், அவனை அறிய முடியாது என்று ஸந்தேஹிப்பவர்களுக்கு, மூன்றாவது மந்திரத்தில் அவதார ஸௌலப்யம் சொல்லப்பட்டது.] என்று மணவாளமாமுனி களின் ப்ரமாணத்திரட்டில் எடுக்கப்பட்டிருக்கும் 'நாராயண முனி' என்பவரின் வியாக்யானத்தில் இந்த மந்த்ரார்த்தம் ஸங்க்ரஹிக்கப் பட்டிருக்கிறது. முந்தின மந்த்ரத்தில் ப்ரஹ்மத்தை அறிவதினாலேயே மோக்ஷம் என்று சொல்லப்பட்டது. இங்கு அவதாரங்கள் பல செய்திருக்கும் அச்யுதனை அறிவது எளிது என்று காட்டப்படுகிறது. (ப்ரஜாபதி:...அந்த:) ப்ரஜைகளைக் காப்பாற்றுபவனான ஸர்வேச் வரன் ஹ்ருதயத்தில் அந்தர்யாமியாக ஸஞ்சரிக்கிறான். இந்த வாக்யம் நாராயணவல்லியிலும் காணப்படுகிறது. அதனால் நாராயணனே

இங்கு ப்ரஜாபதி சப்தத்தினுல் சொல்லப்படுகிருன் என்று நிர்ண யிக்கிறேம். மேலும், ஸர்வஜீவர்களேயும் காப்பது விஷ்ணுவுக்கே அஸாதாரணமானது. 'பதிம் விச்வஸ்ய' என்று சொல்லப்பட்ட அவனே உலகிற்கெல்லாம் ஸ்வாமியாவான். ஆத்மாவிற்கு நிலே நின்ற புருஷார்த்தமாகிற மோக்ஷத்தை மற்றவர்களால் கொடுக்க இயலாது. நசிக்கக்கூடிய சிற்றின்பப் பலன்களாகிய, அர்த்தகாமங் களேயும், பகவானிடமிருந்து வரம்பெற்றே கொடுக்கிருர்கள். மஹாபாரதத்தில்,

''ராஜாதி₄ராஜஸ் ஸர்வேஷாம் விஷ்ணுர் ப்₃ரஹ்மமயோ மஹாந்
ஈச்வரம் தம் விஜாநீம: ஸ பிதா ஸ ப்ரஜாபதி:''

[எல்லா அரசர்களுக்கும் மேலான அரசராயிருப்பவரும், பெரிய வரும், ப்ரஹ்மஸ்வரூபியுமானவர் விஷ்ணு. அவரை ஈச்வரரென்று அறிகிறேம். அவரே (எல்லோருக்கும்) தந்தை. அவரே ப்ரஜாபதி.] என்று சொல்லப்பட்டபடியால் ப்ரஜாபதிசப்தத்தினுல் குறிக்கப் படுபவன் கேசவனே. ''அஸத்(இல்லாதவை)திலிருந்து வேறுபட்ட எல்லா வஸ்துக்களுக்கும் ஸ்வாமியாகவும், ரக்ஷகராகவும் இருப்பவர் ப்ரஜாபதி'' என்று நாராயணயதி வியாக்யானம் செய்தார். (கர்ப்பே அந்த: சரதி) ஹ்ருதயத்தில் அந்தர்யாமியாயிருக்கிருன். இப்படி அந்தர்யாமியாயிருப்பதற்குக் காரணமென்ன?ப்ரயோஜனமென்ன? துஷ்டநிக்ரஹசிஷ்டபரிபாலனங்கள் காரணமல்ல. இவனுக்குத் தன்னிடம் அத்வேஷத்தை உண்டாக்கி, ஆபிமுக்யத்தை வளர்ப்ப தற்காக அந்தர்யாமியாயிருக்கிருன் அநந்தன். யோகஸாக்ஷாத் காரம் கைவந்தவர்களுக்கு ஹ்ருதயகமலத்தில் ஸேவை ஸாதிக்கிருன். தினந்தோறும் உறங்கும்போது ஜீவர்களே ஆலிங்கனம்செய்து கொண்டு ஸகலச்ரமங்களேயும் போக்குகிருன். ஜன்மம் கழியும்போது மரணுவஸ்தையின் ச்ரமத்தைக் குறைக்கிருன். மோக்ஷமடைபவர் களான ஜீவாத்மாக்களுக்கு ஸுஷும்நு நாடியைத் தெரியும்படி செய்து அதன்வழியே ப்ரஹ்மரந்த்ரத்தைபேதித்துக்கொண்டு போக அனுக்ரஹம் செய்கிருன்.

அந்தர்யாமியை அறிவது மிகவும் கடினம். பூகத (பூமிக்குள் இருக்கும்) ஜலத்திற்கு ஸமானமானது அந்தர்யாம்யவஸ்தை என்று ஆசாரியர்கள் அருளியிருக்கிருர்கள். மண்ணேத் தோண்டியெடுத்து அவசியமானுல் பாறையையும் உடைத்து பூமியிலிருக்கும் ஜலத்தைத் தேடிக் கண்டுபிடிக்குமாப்போலே மாம்ஸசரீரமாகிற மண்ணினுல் மறைக்கப்பட்டதும், நெஞ்சாகிற பாறையினுல் மூடப்பட்டதுமான

அந்தர்யாமியை அறியமுடியாதென்றே பூகதஜலத்தை உவமை யிட்டார்கள். அம்மாதிரியான அருமையில்லாமல், எல்லாருடைய ஊனக்கண்ணுக்கும் இலக்காகும்படியான அவதாரங்களை அடுத்த படியாக அறிவிக்கிறது. அப்படி அவதாரம் செய்வதற்குக் கர்மம் காரணமன்று. அனுக்ரஹமே காரணம். கிணற்றில் விழுந்த குழந்தையை எடுப்பதற்குத் தாயும் கூடக்குதிக்குமாப்போல் ஸம் ஸாரஸாகரத்தில் அமிழ்ந்து அவஸ்தைப்படும் சேதனர்களை அக் கடலினின்றும் கறையேற்றுவதற்காக நாட்டில் பிறந்து மனிசர்க் காகப் படாதனபடுகிருன் நாராயணன். துஷ்டநிக்ரஹசிஷ்டபரி பாலனம் செய்வதற்காகப் பிறக்கிருன் பரவாஸுதேவன். இந்திரி யங்களுக்கு எட்டாத தன்னை ஸம்ஸாரிகள் கண்ணுக்குத் தோன்றும் படி செய்கிருன். வேண்டினவற்றையெல்லாம் தன்னடியார்களுக்குத் தருகிருன். குளிரக்கடாக்ஷிப்பது, பேசுவது, கேட்பது, சிரிப்பது, ஆலிங்கனம்செய்வது, இப்படிப் பலவிதமாக அவர்களை ஆட் கொள்ளுகிருன். ''ஹஸிதம் ப$_4$ாஷிதம் சைவ'' [சிரிப்பதையும், பேசு வதையும்] என்ருர் வால்மீகி. ராமனுடைய ஆலிங்கனத்தை நினைத்து அனுமானும் ''ப$_4$ாவோ நாந்யத்ர க$_3$ச்ச$_2$தி'' [என் நினைவு வேறெங்கும் செல்லாது.] என்ருர். ''ஸம்ஸ்ப்ருச்யாக்ருஷ்ய ச ப்ரீத்யா ஸுக$_3$ாட$_4$ம் பரிஷஸ்வஜே''[க்ருஷ்ணன் அக்ரூரனைத்தொட்டு, இழுத்து, ப்ரீதியுடன் நன்கு தழுவிக்கொண்டார்.] என்றதும் இங்கு நினைக்கத்தக்கது.

விபவாவதாரகாலங்களில்லாமல் இழந்தவர்க்கும் அவ்விழவு தீருவதற்காக எடுக்கப்படும் அர்ச்சாவதாரமும் இங்கு சொல்லப் படுவதாகக் கொள்ளலாம். ஒரு காலத்திலோடும் காட்டாறு போன்றது விபவாவதாரம். அதில் தேங்கின மடுப்போன்றது அர்ச்சாவதாரம். பாஞ்சராத்ர வைகானஸ ஆகமங்களில் சொன்ன படி ஸுதை, சிலை முதலியவைகளால் செய்யப்பட்ட ரூபங்களில் ஆவாஹனம் செய்யப்பட்டு சாஸ்த்ரவச்யனும் அர்ச்சகபராதீன னும் இருக்கிருன் இருடீகேசன். எல்லா ஜனங்களுடைய ஊனக் கண்ணுக்கும் தன்னை விஷயமாக்கிக்கொண்டு ஸர்வாபேக்ஷிதங் களையும் கொடுக்கிருன்.

(அஜாயமானோ பஹுதா விஜயாதே) 'பிறப்பில்லாதவனுயிருந் தும் பலவிதமாகப் பிறக்கிருன்' என்கிறது வேதம். ''அஜோபி ஸந்-ஸம்பவாமி'' [பிறப்பற்றவனுயிருந்தும் பிறக்கிறேன்.] என்று க்ருஷ்ணபகவான் கீதையில் அருளினுன். ''பிறப்பில் பல்பிறவிப் பெருமான்'' என்ருர் வேதம் தமிழ் செய்த மாறன். (அஜாயமாந:)

"ஜநிஜராதி₃ ஸகலது₃ரித தூ₃ர:" [பாபபலமான ஜன்மம், கிழத்தனம் முதலியவைகளற்றவன்.] என்று வியாக்யானம் செய்தார் நாராயண யதி. இங்கு 'பிறப்பு' என்பது, கிழத்தனம், இறப்பு முதலிய ஆறு விகாரங்களேயும் காட்டுகிறது. (பஹுதா விஜாயதே) எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தான். "ப₃ஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி" [எனக்குப் பல பிறப்புகள் கடந்துவிட்டன.] என்று தன் ஜன்மத்தைத் தானே சொன்ன அவனும் நெஞ்சு உளுக்கியிறே இருப்பது. ஆழ்வாரும் 'சன்மம் பலபல செய்து' என்ருர். (பஹுதா) தேவர், திர்யக், மனுஷ்யர், ஸ்தாவரம் என்று சொல்லப்படும் எல்லா யோனிகளிலும் பிறந்தான். வ்யூஹம், விபவம், அர்ச்சை எனப்படும் எல்லா அவஸ்தைகளிலும் ஆவிர்ப்பவித்தான் என்றும் பொருள் கொள்ளலாம். பிறக்கைக்கு ஹேதுவான கர்மம் இல்லாமலிருந்தும் கர்மவச்யரும் பிறவாத ஜன்மங்களிலும் பிறந்தான். கர்மவச்யன் பிறவிக்கு எல்லே காண்கிருேம். அகர்மவச்யன் (கர்மத்திற்கு வசப்படாதவன்) பிறவிக்கு எல்லே காணவில்லே. கர்மத்திற்கு எல்லேயுண்டு. அனுக்ரஹத்துக்கு எல்லேயில்லே. (விஜாயதே) 'பலவிதமாகப் பிறக்கிருன்' என்றும், 'விசேஷமாகப் பிறக்கிருன். என்றும் பொருள் கொள்ளலாம். 'தேவர் முதலிய ஒவ்வொரு ஜாதியிலும் பலவிதமாகப் பிறக்கிருன்' என்று நாராயணமுனி. (விசேஷேண ஜாயதே) விசேஷமாகப் பிறக்கிருன். அப்ராக்ருத சரீரத்தை இதர ஸஜாதீயமாக்கிப் பிறக்கிருன். 'சங்கொடுசக்கரம் வில் ஒண்மையுடைய உலக்கை ஒள்வாள் தண்டு கொண்டு" பிறக்கிருன். தன் ஐச்வர்யசக்திகளில் ஒன்றும் குறையாமல் பிறக்கிருன். அவதார ரஹஸ்யத்தை அறிந்து அனுஸந்தித்தவர்கள் ஜன்மம் அறும்படி பிறக்கிருன். பிறந்தபின்பே மேன்மையடைகிருன். வேதத்திலும் "யுவா ஸுவாஸா: பரிவீத ஆக₃ாத் ஸ உ ச்ரேயாந் ப₄வதி ஜாயமாந: தம் தீ₄ராஸ: கவய உந்நயந்தி" [யௌவனத்தையுடையவனுகவும், அழகிய பீதாம்பரத்தை தரித்தவனுகவும், நித்யஸூரிகளால் சூழப்பட்டவனுகவும் புருஷோத்தமன் பிறக்கிருன். அவன் பிறந்தபின்பே மேன்மையுடையவனுகிருன். அவனே தீரர்களான கவிகள் தியானிக்கிருர்கள்.] என்றல்லவோ சொல்லப்பட்டது. (விஜாயதே) கர்மவச்யர்களேப்போன்ற சரீரத்துடன் பிறக்கிருன். அவர்கள் பத்து மாதம் வயிற்றிலிருந்து பிறந்தால் இவன் பன்னிரண்டு மாதம் கர்ப்பவாஸம் செய்து பிறக்கிருன். "ததச்ச த்₃வாத₃சே மாஸே" [பனிரண்டாவது மாதத்தில்] என்றும், "பன்னிரு திங்கள் வயிற்றிற்கொண்ட" என்றுமல்லவோ சொல்லப்பட்டிருக்கிறது. அவர்களுக்கு

ஆபத்தேற்படும் காலத்தையே தனக்குப் பிறக்கைக்குக் காலமாகக் கொண்டு பிறக்கிறுன். அவர்களுடைய ஸம்ரக்ஷணத்தையே ப்ரயோஜனமாகக்கொண்டு பிறக்கிறுன். ஆவிர்பூ₄தம் மஹாத்மநா' [மஹாத்மாவான நாராயணன் ஆவிர்பவித்தான்.] என்ற வால்மீகி மஹரிஷி அவதரித்ததினுல் தோஷமில்லே என்பதைக் காட்டுவதற்காக 'ஆவிர்ப்பவித்தான்' என்று உரைத்தார். ஆச்ரிதர்க்காக கர்ப்பவாஸம் பண்ணின மஹாகுணத்தை இழக்கலாகாது என்று வேதம் 'பிறந்தான்' என்கிறது. ஆழ்வாரும் 'தோன்றினவாறும்' என்று சொல்லாதே 'பிறந்தவாறும்' என்றல்லவோ பாடிஞர். ஸம்ஸாரிகளுக்குப் பிறக்கப் பிறக்க ஞானம் மழுங்கும். ரத்னத்தைத் தேய்க்கத் தேய்க்க ஒளி அதிகமாமாப்போலே அவதாரம் செய்யச் செய்ய இவனுடைய மஹாகுணங்கள் பிரகாசிக்கும். ராமாவதாரத்தைக் காட்டிலும் க்ருஷ்ணுவதாரத்தில், பாண்டவதூதனும், பார்த்தஸாரதியாயுமிருந்து தன் பெருங்குணங்களே வெளியிட்டானன்றே? தானே சொல்லும்போதும் "ஜந்ம கர்ம ச மே தி₃வ்யம்" [என்னுடைய ஜன்மங்களும், சேஷ்டிதங்களும் அப்ராக்ருதமானவை] என்று மதிப்புடனன்றே சொன்னுன்.

(தஸ்ய தீரா: பரிஜாநந்தி யோநிம்) அவனுடைய அவதார ரஹஸ்யத்தை தீரர்களே அறிகிறுர்கள். (தீரா:) புத்திமான்கள். 'தீரர்களான கவிகள்' என்று மற்றொரு ச்ருதியில் சொல்லப்பட்டவர்கள். பராங்குச பட்டநாத பரகாலாதிகளே இவன் பிறப்பின் பெருமையை அறிவார்கள். (தீரா:) கலங்காதவர்கள் என்றும் பொருள்கொள்ளலாம். ச்ருதிகளே அறியாதவர்கள் புருஷோத்தமனுடைய அவதாரமஹிமையை அறியாமல், 'பரப்ரஹ்மத்திற்கு ஜன்மமுண்டோ' என்று ஸந்தேஹப்பட்டுக்கொண்டு 'இவன் மனுஷ்யனே?' என்று கலங்குவார்கள். அம்மாதிரியான கலக்கமில்லாதவர்கள். "பிதா புத்ரேண பித்ருமாந் யோநியோநௌ நாவேத₃விந்மநுதே தம் ப்₃ருஹந்தம்" [ஒவ்வொரு அவதாரத்திலும் ஸர்வலோகபிதாவான நாராயணன் தன்னுல் உண்டாக்கப்பட்ட ஒருவனைத் தனக்குத் தகப்பனுகக்கொண்டு பிறக்கிறுன். வேதத்தை அறியாதவன் அவனே பரமாத்மாவென்று அறியமாட்டான்.] என்றல்லவோ மறைகள் முறையிட்டன. (தஸ்ய யோநிம் பரிஜாநந்தி) அவனுடைய அவதாரத்தை நன்கு அறிகிறுர்கள். (பரிஜாநந்தி) திரும்பத்திரும்ப அறிகிறுர்கள். ஸகல சேஷ்டிதங்களேயும் அறிகிறுர்கள். அதைவிட்டுப் பரத்வத்திலும் மனம் செலுத்தமாட்டார்கள். "ப₄வோ நாந்யத்ர க₃ச்ச₂தி"

என்பார்கள். ''அச்சுவை பெறினும் வேண்டேன்'' என்றிருப்பார்கள். நம்மாழ்வார், ஸர்வேச்வரன் யசோதையால் உறலில் கட்டுண்டு ஏங்கிய எளிவை அனுஸந்தித்தவுடன் ''எத்திறம்!'' என்று ஆறு மாதம் மோஹித்துக் கிடந்தாரன்றோ. மறுபடியும் ''பிறந்தவாறும்'' என்று பரமபுருஷனுடைய பிறப்பை அனுஸந்தித்து ஆறுமாதம் மோஹித்துக் கிடந்தார் என்று நம் ஆசார்யர்கள் அருளிச்செய்வர் கள். அவனுடைய பிறப்பின் பெருமையை அறிந்தவர்களை 'தீரர் கள்' என்றது வேதம்; அறியாதவர்களை ''மூடர்கள்'' என்றான் கண்ணன். 'யோநிம்' என்றது ச்ருதி; 'மாநுஷீம் தநும் ஆச்ரிதம்' என்றான் மாதவன். அறிந்தவர்களை 'பரிஜாநந்தி' என்றது மறை; அறியாதவர்களை 'அவஜாநந்தி' என்றான் அச்யுதன்.

எதற்காக இந்த அவதார ரஹஸ்யத்தை அறிகிறார்கள்? எனில்: (மரீசீநாம் பதமிச்சந்தி வேதஸ:) சோதிமயமான நித்யஸூரி களுடைய பரமபதத்தை அடைவதற்காக என்று சொல்லப்படுகிறது. (மரீசீநாம்பதம்...வேதஸ:)' நித்யஸூரிகளின் நாடு' என்று சொன்ன பின் அப்ரதானமாக பரமபுருஷனுடைய தேசம் என்றும் சொல்லப்படுகிறது. நம்மாழ்வாரும் ''வானவர் நாடு'' என்றல்லவோ அருளிச்செய்தார். அவர்களிட்ட வழக்காயிருப்பதால் அவர் களுடைய பரமபதம் என்றுஉரைக்கப்படுகிறது. ' வானவர் நாட்டை யும்'' என்னுமிடத்தில் வியாக்யானத்தில் நம் ஆசார்யர்கள் ''குடி யிருப்பாரோபாதியாயிற்று பரமபதத்தில் ஸ்ரீவைகுண்டநாதனுக்கு (இருப்பு). ப்ராப்திதேசம் நித்யஸூரிகள் இட்டவழக்காயிருக்கும்.'' என்று அருளிச்செய்தது இங்கு அனுஸந்திக்கத்தக்கது. அவதார ரஹஸ்யத்தை அறிவதால் மோக்ஷமடைவார்களென்பது,

''ஜந்ம கர்ம ச மே தி₃வ்யம் ஏவம் யோ வேத்தி தத்த்வத:
த்யக்த்வா தே₃ஹம் புநர் ஜந்ம நைதி மாமேதி ஸோர்ஜுந!''

[அர்ஜுநா! என்னுடைய அப்ராக்ருதமான ஜன்மத்தையும் சேஷ்டி தங்களையும் இம்மாதிரியாக எவன் உண்மையாக அறிகிறானோ அவன் தேஹத்தை விட்டு மறு ஜன்மத்தையடைவதில்லை, என்னையே அடைகிறான்.] என்று கீதாசார்யனால் சொல்லப்பட்டது. இம்மாதிரி யான அவதார வைபவம் மற்ற தேவதைகளுக்குக் கிடையாது,

4. யோ தே₃வேப்₄ய ஆதபதி, யோ தே₃வாநாம் புரோ ஹித:
பூர்வோ யோ தே₃வேப்₄யோ ஜாத:, நமோ ருசாய ப்₃ராஹ்மயே.

[எந்தப்பரமபுருஷன் நித்யஸூரிகளுக்காகப் பிரகாசிக்கிறரோ. எவர் நித்யஸூரிகளுக்கு அனுதிகாலமாக ஹிதத்தைக் கொடுப்பவரோ, எவர் நித்யஸூரிகளுக்கும் முதல் வராயிருக்கிறரோ. பிரகாசிப்பவரும், பரப்ரம்ஹஸ்வரூபியுமான அவருக்கு நமஸ்காரம்.]

இந்த மந்திரத்தில் புருஷோத்தமன் நித்யஸூரிநிர்வாஹகன் என்னும் விஷயம் சொல்லப்படுகிறது. இதையே வேதம் தமிழ் செய்த மாறனும்,

"வானவராதியென்கோ? வானவர் தெய்வமென்கோ?
வானவர் போகமென்கோ? வானவர் முற்றுமென்கோ?" என்று திருவாய்மொழியில் திருவாய்மலர்ந்தருளினர்.

(யோ தேவேப்ய ஆதபதி) 'எந்தப் பரமபுருஷன் நித்யஸூரிகளுக்காக ஆதியஞ்சோதியுருவுடனும், ஸமஸ்தகல்யாணகுணங்களுடனும் பிரகாசிக்கிறரோ' என்று சொல்லப்படுகிறது. ஜிதந்தேஸ்தோத்ரத்திலும், "ப₄க்தாநாம் த்வம் ப்ரகாசஸே" [பக்தர்களுக்காகவே நீ பிரகாசிக்கிருய்] என்றல்லவோ சொல்லப்பட்டது. நம்மாழ்வார் இதை 'வானவர் தெய்வமென்கோ?' என்ருர். (யோ தேவாநாம் புரோஹித:) எந்தப் பரமாத்மா நித்யஸூரிகளுக்காக அனுதிகாலமாக ஹிதத்தைக் கொடுக்கிருரோ. அவர்களுக்கு உண்ணும் சோறு பருகு நீர் தின்னும் வெற்றிலையுமான பகவத்கைங்கர்யத்தைக் கொடுக்கிருர் என்று தாத்பர்யம். "தத்₃ விப்ராஸோ விபந்யவோ" என்று சொல்லுகிறபடி பகவானைச் சூழ்ந்திருந்தேத்துவதாகிற ப்ரஹ்மானந்தத்தை அவர்கள் அனுதிகாலமாக அனுபவிக்கிருர்கள். கைங்கர்யமே உண்மையான ஹிதம்; இவ்வுலகிலுள்ள ஐச்வர்யங்களும் ஹிதமல்ல. கைவல்யநிஷ்டர்களுடைய ஆத்மாநுபவமும் உண்மையான ஹிதமல்ல. ப்ரகாரத்தளவில் நிற்கும் ஆத்மானுபவமாத்ரத்திலன்றிக்கே ப்ரகாரியளவும் செல்லும் பரமபுருஷார்த்தலக்ஷண மோக்ஷமே ஹிதமெனத்தகுந்தது. சடகோபன் இதை 'வானவர் போகமென்கோ? வானவர் முற்றுமென்கோ?' என்று அருளினர். (பூர்வோ...ஜாத:) எவர் நித்யஸூரிகளுக்கு முதல்வராயிருக்கின்றரோ. 'வானவராதியென்கோ?' என்ருர் நம்மாழ்வார். நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகன்... அவர்களுடைய ஸத்தைக்கு (இருப்புக்கு) காரணமாயிருப்பவன். அவர்கள் நித்யராயிருக்கும்போது அவர்களுக்கு ஸத்தாஹேதுவென்று எப்படிச் சொல்லமுடியும்? அவர்களுடைய நித்யத்வம் அவனுடைய நித்யேச்சையாலே இருக்கிற

படியால் அவர்களுக்கு ஸத்தாஹேதுவென்று சொல்லலாம். இந்த இச்சை அழிந்தால் நித்யத்வமும் மாளவேண்டிவருமன்றே? (ருசாய) திவ்யமங்களவிக்ரஹத்துடன் ப்ரகாசித்துக்கொண்டிருக்கும்படியான பரமபுருஷனுக்கு. 'ஒளிமணிவண்ணன்' என்று சொல்லப்பட்ட அவனுடைய சோதிவடிவு இங்கு உணர்த்தப்படுகிறது. (ப்ராஹ்மயே நம:) பரப்ரஹ்மமாயிருக்கும் ஸ்ரீமந்நாராயணனுக்கு நமஸ்காரம். 'நாராயணாய நம:' என்று த்வயத்தில் சொல்லப்பட்டது இங்கு உணர்த்தப்படுகிறது. 'ப்ராஹ்மயே' என்னுமிடத்தில் நான்காம் வேற்றுமையால் கைங்கர்யம் பிரார்த்திக்கப்படுகிறதென்றும், 'நம:' என்று 'அந்தக் கைங்கர்யத்தினால் வரும் ஆனந்தமும் என்னுடையதல்ல; பகவானுடையதே' என்று சொல்லப்படுகிறதென்றும் கொள்ள வேண்டும். இந்த மந்திரத்திலுள்ள தேவசப்தங்களை ப்ரஹ்மாதி தேவபரமாகவும் ஆசாரியர்கள் பொருள் கொண்டுள்ளனர்.

5. ருசம் ப்₃ராஹ்மம் ஜநயந்த: தே₃வா அக்₃ரே தத₃ப்₃ருவந்
யஸ்த்வைவம் ப்₃ராஹ்மணோ வித்₃யாத் தஸ்ய தே₃வா அஸந் வசே.

[பரப்ரஹ்மத்தினுடைய ப்ரீதியை உண்டுபண்ணும் நித்யஸூரிகள் புருஷோத்தமனுக்கெதிரில் 'நம:' என்னும் அச்சொல்லை உரைத்தனர். ப்ரஹ்மஜ்ஞானியான ஒருவன் உம்மை இப்படி அறிந்தானாகில், அவனுக்கு ப்ரஹ்மாதி தேவர்கள் வசத்திலிருப்பார்கள்.]

(ருசம் ப்ராஹ்மம் ஜநயந்த: தேவா...) புருஷோத்தமனுடைய ப்ரீதியை உண்டுபண்ணும் தேவர்களான நித்யஸூரிகள், அவனுக்கு எதிரில் 'நம:' என்னும் சொல்லைக் கூறுகின்றனர். இதிலிருந்து பகவானுடைய முகோல்லாஸத்திற்காகக் கைங்கர்யம் செய்யப்படுகிறதேயொழிய, நம்முடைய ஆனந்தத்திற்காகவல்ல என்று உணர்த்தப்படுகிறது. அவனுகக்கிறானென்பதற்காக நாமுகந்து செய்யவேண்டுமேயொழிய நம் உகப்புக்காகக் கைங்கர்யம் செய்யலாகாது. 'நம:' என்னும் பதம் "அஹமபி நமம ப₄க₃வத ஏவாஹமஸ்மி" [நானும் எனக்குரியேனல்லேன். பகவானுக்கே நான் உரியவன்.] என்னும் பொருளையுடையதன்றோ. "நம இத்யேவ வாதி₃ந:" ['நம:' என்றே சொல்லுபவர்கள் நித்யஸூரிகள்.] என்றல்லவோ சொல்லப்பட்டிருக்கிறது. "பூ₄யிஷ்டா₂ம் தே நம உக்திம்" என்கிறபடி 'நம:' என்னும் சொல்லை மிகப்பெரிதாகவன்றோ நினைத்து உகக்கிறான் மாதவன். (யஸ்த்வைவம்...) எவன் இம்மாதிரி பகவத்கைங்கர்யமே பரமபுருஷார்த்தமென்றிருக்கிறானோ அவனுக்கு ப்ரஹ்மாதி தேவர்கள் வசத்திலிருக்கிறார்கள். விஷ்ணுபுராணத்தில்,

''ஸ்வபுருஷமபி$_4$வீக்ஷ்ய பாசஹஸ்தம் வத$_3$தி யம: கில தஸ்ய கர்ணமூலே
பரிஹர மது$_4$ஸூத$_3$நப்ரபந்நாந் ப்ரபு$_4$ரஹமந்யந்ருணாம் ந வைஷ்ணவாநாம்''

[யமன் பாசத்தைக் கையில்கொண்ட தன் தூதனைப்பார்த்து, அவன் காதினுள் பின்வருமாறு சொல்லுகிருன்:– ''மதுஸூதனனை சரண மடைந்தவர்களை அணுகாதே. நான் மற்றவர்களுக்கே பிரபு: வைஷ்ணவர்களுக்கல்ல.] என்றல்லவோ யமன் கூறியதாகச் சொல்லப்பட்டது.

திருமழிசையாழ்வாரும்,

''திறம் பேண்மின் கண்டீர் திருவடிதன் நாமம்
மறந்தும் புறந்தொழா மாந்தர்—இறைஞ்சியும்
சாதுவராய்ப் போதுமின்களென்ருன் நமனும் தன்
தூதுவரைக் கூவிச் செவிக்கு.

என்று இதையே அருளிச்செய்தார். தொண்டரடிப்பொடியாழ்வார் ''நாவலிட்டுழி தருகின்ருேம் நமன் தமர் தலைகள் மீதே'' என்று அருளிச் செய்தார். திருமங்கையாழ்வாரும் ''வள்ளலே! உன் தமர்க் கென்றும் நமன் தமர் கள்ளர்போல்'' என்று அருளினுர். ''என் தமர் நமன் தமரால் ஆராயப்படார்காண்'' என்றும், ''நமன் தமர் என் தமரை வினவப் பெறுவாரலர்'' என்றும் அபயமளித்தான் அச்யுதன். பகவானைப் பற்றின வுடன் எத்தேவர் வாலாட்டும் ஒழியும். ''பிஞ்ஞகன் தன்னோடும் எதிர் வன் அவன் எனக்கு நேரான்'' [பிஞ்ஞகன்-சிவன்] என்றல்லவோ திருமழிசைப்பிரான் அருளிச்செய்தார்.

6. ஹ்ரீச்ச தே லக்ஷ்மீச்ச பத்ந்யௌ, அஹோராத்ரே பார்ச்வே
நக்ஷத்ராணி ரூபம் அச்விநௌ வ்யாத்தம்
இஷ்டம் மநிஷாண அமும் மநிஷாண ஸர்வம் மநிஷாண.

[உனக்கு பூமிதேவியும், ஸ்ரீதேவியும் பத்நிகள். பகலுமிரவும் பக்கத்திலிருக்கிருர்கள். உன் உருவம் நக்ஷத்திரங்கள்போல் (ஒளியுள்ளதாய்) இருக்கிறது. அச்வி நீதேவர்கள்போல் (உம்முடைய திருமுகம்) அழகாயிருக்கிறது. இஷ்டத்தைக்கொடும். இந்தக் கைங்கர்யத்தைக் கொடும். எல்லாவற்றையும் கொடும்.]

முன் இரண்டு மந்த்ரங்களிலும் சொல்லப்பட்ட கைங்கர்யம் எம்பெருமானும் பிராட்டியுமான சேர்த்தியிலேயே செய்யப்பட வேண்டும் என்று கோஷிக்கிறது இந்த ருக். இதுவரையில், விக்ர

ஹத்தாலும், குணங்களாலும், பரிகரங்களாலும் பரமபுருஷன் நிர்ண யிக்கப்பட்டான். புருஷஸூக்தத்தின் கடைசி மந்த்ரமான இதில் அவனுக்கே அஸாதாரணமான பிராட்டிகளைக்கொண்டு நிச்சயிக்கப் படுகிருன். பட்டரும்,

''வேத₃ாந்தா: தத்வசிந்தாம் முரபி₄து₃ரஸி யத்பாத₃சிந்ஹைஸ்தரந்தி''

[வேதாந்தங்கள், முராரியின் மார்பில் எந்தப் பிராட்டியின் திருவடியடையாளத்தைக்கொண்டே, பரதத்வவிசாரத்தை முடிக்கின்றனவோ] என்று இவ்விஷயத்தை அழகாக அருளிச் செய்தார். மேலும்,

''ஈஷ்டே கச்சித் ஜக₃த இதி ய: பௌருஷே ஸூக்த உக்த:
தம் ச த்வத்கம் பதிமதி₄ஜக₃ாவுத்தரச்சாநுவாக:''

[புருஷஸூக்தத்தில் உலகத்திற்கெல்லாம் நாயகனுகச் சொல்லப் பட்டவனை, உன்னுடைய (லக்ஷ்மியினுடைய) பதியென்று உத்தரானு வாகம் உத்கோஷித்தது.] என்றும் அருளிச்செய்தார். திருவின் நாயகன், நிலமகள் நண்பன், ஆயர்மடமகள் அன்பன், அச்யுதனே இங்கு அறிவிக்கப்படுகிருன், நமக்கு உபாயோபேயங்கள் ச்ரிய: பதியே ஒழிய ப்ரஹ்மசாரிநாராயணனல்ல என்னும் ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்தம் இங்கு வெளியிடப்படுகிறது.

(தே) உமக்கு. 1. தலைகளாயிரம், கண்களாயிரம், தாள்களா யிரமுடைய உமக்கு. 2. ஸகலசராசரங்களையும் வியாபித்திருக்கும் உமக்கு. 3. ''ஸர்வம் விஷ்ணுமயம் ஜக₃த்'' எனப்படும் உமக்கு. 4. தேசகாலவஸ்து பரிச்சேதமில்லாத உமக்கு. 5. மோக்ஷத்திற்கு ப்ரபுவான உமக்கு. 6. ஸ்ரீவைகுண்டவாஸியான உமக்கு. 7. அண் டத்தை உண்டாக்கின உமக்கு. 8. நான்முகனைப் படைத்த நாரா யணுன உமக்கு. 9. ப்ரக்ருதிமண்டலத்திற்கப்பால் சோதியுருவா யிருக்கும் உமக்கு. 10. நாமரூபங்களைக் கொடுத்தருளிய உமக்கு. 11. ப்ரஹ்மருத்ரேந்த்ரர்களால் தியானிக்கப்படும் உமக்கு. 12. 'உம்மை உபாஸிப்பதைத்தவிர வேறு மோக்ஷோபாயமில்லை' என்னும் கீர்த்திபெற்ற உமக்கு. 13. பாற்கடலில் பள்ளிகொண்ட பரமனுய் அந்தர்யாமியாயிருக்குமுமக்கு. 14. பிறப்பில் பல்பிறவிப் பெருமாறுயிருக்குமுமக்கு. 15. அவதார ரஹஸ்யத்தை அறிந்தவர் களால் அடையப்படும் உமக்கு. 16. நித்யஸூரிகளுக்கு நாதனும், அவர்களால் வணங்கப்படுபவனுயுமிருக்கும் உமக்கு. இங்கு

சொன்ன ஏற்றங்களுக்கெல்லாம் மேலான ஏற்றத்தை அடுத்தபடி யாகச் சொல்லுகிறது. (ஹ்ரீச்ச லக்ஷ்மீச்ச பத்ந்யௌ) பூதேவியும், ஸ்ரீதேவியையும் உமக்குப் பத்னிகள். இரண்டாவது 'சகார'த்தினுல் நீளாதேவியும் உணர்த்தப்படுகிருள். ஆழ்வாரும் "குழற்கோவலர் மடப்பாவையும் மண்மகளும் திருவும்" என்று அருளினுர். "ஆச்ரிதர் குற்றத்தைப் பொறுப்பிக்கும் பிராட்டி; 'குற்றம் காண்பானென்? பொறுப்பானென்?' என்றிருக்கும் ஸ்ரீபூமிப்பிராட்டி; நப்பின்னைப் பிராட்டி க்ஷமைதான் ஒரு வடிவாயிருக்கும். பெரியபிராட்டியார் இவனுக்கு ஸம்பத்தாயிருக்கும்; அது விளையும் தரை (பூமி); அதனை அனுபவிக்கும் போக்தாவாயிருக்கும் நப்பின்னை;" என்ற பெரிய வாச்சான்பிள்ளையின் ஸ்ரீஸூக்தி இங்கு அனுஸந்திக்கத்தக்கது. "ந கச்சிந் நாபராத்₄யதி" [குற்றம் செய்யாதவர்கள் ஒருவருமில்லையே.] என்பாள் ஸ்ரீதேவி. 'குற்றமே இல்லையே' என்று காணுக்கண்ணிட் டிருப்பாள் பூமிதேவி. "க்ஷமயா ப்ருதிவீஸம:" [(ஸ்ரீராமன்) பொறுமை யில் பூமிக்கு ஸமானமானவன்.] என்றல்லவோ சொல்லப்பட்டது. பூமிப்பிராட்டிக்கு நாம் செய்யும் குற்றங்களுக்கோர் கணக்கில்லை. அவள் நமக்குச் செய்யும் நன்மைகளுக்கோ எல்லையில்லை. நாம் உண்டாவதற்கு உதவுகிருள். நாம் நடக்கும்போதும். கிடக்கும் போதும் நம்மைத் தாங்குகிருள். நாம் உயிருடனிருப்பதற்கு வேண்டி யவைகளைக் கொடுத்துக் காப்பாற்றுகிருள். நாம் அதற்குப் பதில் அவளை வெட்டுகிறோம்; கூரிய ஆயுதங்களினுல் குத்திக் கீறிக் கிழிக் கிறோம்; மலஜலாதிகளை விட்டு அசுத்தம் செய்கிறோம். பூமியின் புத்ரர்களான நாம் ஒருவர்க்கொருவர் த்வேஷிப்பதன் மூலமும், தூஷிப்பதன் மூலமும் முக்கரணங்களாலும் முடிவில்லாத துன்பங்கள் செய்வதன் மூலமும் நம் தாயாகிய பூமியைத் துன்புறுத்துகிறோம். பொறுமையாகிய பாலை நமக்கு ஊட்டின தாயின் வழி நாம் நடக்க வேண்டாமா? பொறையின் மக்கள் குறை கூறலாமோ? பொறுமையில் மிக்கவளாகையாலும், பூமியில் பிறந்து வளர்ந்த நமக்கு இஹபர புருஷார்த்தங்களை அடையச் செய்பவள் இவளேயாகையாலும் முதலில் 'ஹ்ரீ:' என்று பூமிதேவி சொல்லப்பட்டாள். தேசபக்தியென் பது தாயிடம் அன்பே. ஆனுல் அந்த மாதவியோ மாதவனுடையவள். அவளிடம் பக்தியென்று பெயர்பூண்டு அவனியாள் நாதனின் ஆஜ்ஞைகளை மீறுகிருர்கள் சிலர். பூமிதேவி அவர்களைப் பொறுக் காமல் பாரமாகவே கருதுவாள். புருஷோத்தமனிடமிருந்து பூமியைப் பிரிப்பவர்கள் தகப்பனை விட்டுத்தாயைப் பிரிப்பவர்களாகக் கருதப் படுவார்கள். 'பிராட்டியை பகவானை விட்டுப் பிரித்த ராவணன்

தலையறுப்புண்டான்; பிரிக்கப்பார்த்த சூர்ப்பணகை மூக்கறுப்புண்டாள்' என்று நம் ஆசார்யர்கள் அருளிச்செய்திருப்பது இங்கு அனுஸந்திக்கத்தக்கது.

(லக்ஷ்மீ:) திவ்யலக்ஷணங்கள் பொருந்தியவளாதலால் 'லக்ஷ்மி' என்று கீர்த்திபெற்றிருக்கிறுர் பெரியபிராட்டியார். தேவர், மனுஷ்யர் முதலிய எல்லாராலும் பிரார்த்திக்கப்படுபவளாதலால் 'லக்ஷ்மி' என்றுரைக்கப்படுவதாகவும் கொள்ளலாம். பகவானுக்கு ஜ்ஞானனந்தாதி குணங்களைப்போல் ஸ்வரூபநிரூபகபூதையாயிருப்பவள். மற்ற எல்லா மஹிஷிகளுக்கும் தலைவியாயிருப்பவள். ஜீவர்களுக்கெல்லாம் புருஷகாரமாயிருப்பவள். உலகிலுள்ள ஐச்வர்யங்களையெல்லாம் கொடுப்பவள் ஸ்ரீதேவி. ஐச்வர்யங்கள் எட்டு வகைப்படும்:- 1. தங்கம், வெள்ளி முதலியவைகள் (தனலக்ஷ்மி). 2. தான்யங்கள் (தான்ய லக்ஷ்மி). 3. புத்ரபௌத்ராதிகள்(ஸந்தான லக்ஷ்மி). 4. ரதகஜதுரகபதாதிகளையுடைய ராஜ்யலக்ஷ்மி. 5. வீர்ய (பராக்ரம) லக்ஷ்மி. 6. விஜயலக்ஷ்மி. 7. துஷ்டி, புஷ்டி முதலியவற்றைத்தரும் ஸௌபாக்ய லக்ஷ்மி. 8. மோக்ஷலக்ஷ்மி. இவற்றையெல்லாம் கொடுப்பவள் ஸ்ரீதேவி.

(ஹ்ரீச்ச லக்ஷ்மீச்ச) ஸம்பத்தாயிருப்பவள் ஸ்ரீதேவி; ஸர்வ ஸம்பத்துகளுக்கும் விளைநிலமாயிருப்பவள் நிலமகள். பெருமையுடையவள் பூமகள்; பொறுமையுடையவள் பூ₁தேவி. குணமுடையவள் ஸ்ரீதேவி; மணமுடையவள் மண் மடந்தை. கோஷிப்பிப்பவள் ஸ்ரீதேவி; போஷிப்பவள் பூமிதேவி. அழகுடையாள் இலக்குமி; புகழுடையாள் பூதேவி. ஆதரமுடையவள் அலர்மேல்மங்கை. ஆதாரமானவள் அவனியாள்.

(பத்ந்யௌ) இப்படிப்பட்ட கீர்த்தியையுடைய இவர்கள் பரம புருஷனுக்குப் பத்னிகள் என்று உரைக்கப்படுகிறது. ''பதிம் நயதி'' என்னும் வ்யுத்பத்தியின்படி ஸர்வேச்வரனைக் கண்காட்டிய இடத்தில் காரியம் செய்ய்ச்செய்பவள் என்று பொருள்கொள்ளலாம். ''யஸ்யாவீக்ஷ்ய முக₂ம் தத₃ங்கி₃த பராதீ₄நோ வித₄த்தேகி₂லம்'' [எந்தப் பிராட்டியின் முகத்தைப் பார்த்து அவளுடைய முகபாவத்திற்கு வசப்பட்டு ஸர்வேச்வரன் எல்லாவற்றையும் செய்கிருனே...] என்றல்லவோ ஆழ்வான் அருளினுர். 'ப்ரஜைகளை பகவானிடத்தில் அழைத்துச் செல்லுபவள்' என்றும் பொருள்கொள்ளலாம். இதனுல் இவ்விருவரும் புருஷகாரமாயிருக்கிறுர்களென்று அறிவிக்கப்படுகிறது.

கிறது. "லக்ஷ்மீ: புருஷகாரத்வே நிர்திஷ்டா பரமர்ஷிபி:" [லக்ஷ்மி புருஷகாரம் (சிபார்சு) செய்பவள் என்று பரமரிஷிகளால் நிர்ண யிக்கப்பட்டிருக்கிருள்.] என்ற பாஞ்சராத்ரவசனம் இங்கு அனு ஸந்திக்கத்தக்கது. பூதேவியும் புருஷகாரத்வத்தை உடையவளென் பது 'விஷ்ணுக்ராந்தே வஸுந்தரா...தயா ஹதேந பாபேந கச்சாமி பர மாம் கதிம்" [விஷ்ணுவினுல் (த்ரிவிக்ரமாவதாரத்தில்) அளக்கப் பட்ட பூமியே...அவளால் பாபம் நீங்கினவனுகி பரமபதத்தை அடை கிறேன்.] என்று வேதத்தில் சொல்லப்பட்டது. "பத்யுர் நோ யஜ்ஞ ஸம்யோகே" என்கிற பாணினிஸூத்ரத்தின்படி ஆச்ரிதர்களை ரக்ஷிப்பதாகிற யஜ்ஞத்தில் ஸஹதர்மசாரிணியாயிருப்பவள் என்றும் பத்னீசப்தத்திற்குப் பொருள் கொள்ளலாம். "'ஹ்ரீ:' என்று லஜ்ஜைக்கு அபிமானி தேவதை; 'லக்ஷ்மீ:' என்று ஐச்வர்யத்துக்கு அபிமானி தேவதை" என்ருர் வித்யாரண்யர்.

எவ்வுலகத்திலிருப்பவரும், எம்மதத்திலிருப்பவரும் விரும்பும் இஹபுருஷார்த்தங்கள் தனம், தான்யம், ஸௌக்யம் என்பவையே யாம். இவைகளைக் கொடுப்பவர்கள் ஸ்ரீபூமி நீளாதேவிகளே. இவர்கள் மூவருக்கே 'ஸ்ரீஸூக்தம்' 'பூஸூக்தம்' 'நீளாஸூக்தம்' என்று மூன்று ஸூக்தங்கள் வேதத்தில் படிக்கப்பட்டிருக்கின்றன. இவைகள் நாராயண ஸூக்தத்திற்குப் பின் விவரிக்கப்படும். ஸ்ரீஸூக்தம் லக்ஷ்மியைச் சொல்லுவதென்பதை சைவர்களுட்பட எல்லோரும் ஒப்புக்கொள்ளுகிருர்கள். ஸ்ரீதேவியினுல் கொடுக்கப் படும் ஐச்வர்யங்களும், பூமியில் விளையும் நவதான்யங்களும், காய் கனிகளும், அதிலிருக்கும் மண், நீர், அக்னி, வாயு, ஆகாசம் எனும் பஞ்சபூதங்களுமில்லாமல் மனிதர்களோ மற்ற பிராணிகளோ உயிருடனிருக்கமுடியுமோ? இஹலோக ஸுகஸாதனங்களான நெய், பால், தயிர், உண்ணும் சோறு, பருகுநீர், தின்னும் வெற்றிலை முதலிய பதார்த்தங்களை விரும்பாதார் யாவரே இவ்வுலகிலுள்ளார்? இந்த ஸ்ரீஸூக்த, பூஸூக்த, நீளாஸூக்தங்களைப் படிப்பதனுல் இஹலோக புருஷார்த்தங்களெல்லாவற்றையும் அடையலாம். இவற்றைத் தருவதுடன் நில்லாமல் பரமபுருஷார்த்தமாகிய பகவத் கைங்கர்யத்தையும் பரந்தாமனுடைய பத்னிகள் கொடுக்கிருர்கள். புருஷோத்தமன் தன் பத்னிகள் மூலமாக இவற்றைத் தருகிருன்.

(அஹோராத்ரே பார்ச்வே) பகலுமிரவும் பரந்தாமன் பக்கத் தில் இப்பத்னிகளிருக்கிருர்கள். அகலகில்லேன் இறையும் என்றிருக்

கிருர்கள். நம்மாழ்வாரும், "உடனமர் காதல் மகளிர் திருமகள் மண் மகள் ஆயர் மடமகள் என்றிவர் மூவர்" என்றும், "நிழல் போல்வனர்" என்றும் அருளிச்செய்தார். எதற்காக இப்படி இருக்கிருர்களென்ருல்: "சஞ்சலம் ஹி மந:" [மனது சஞ்சலமானது.] என்றும், "நின்றவா நில்லா நெஞ்சு" என்றும் சொல்லுகிறபடியே சேதனர்கள் மிகவும் நிலையற்ற நெஞ்சையுடையவர்களாதலால், அவர்களுக்கு பகவத் விஷயத்தில் ருசி ஏற்பட்டவுடன் அவர்களை பகவானிடம் சேர்த்து விடவேண்டும் என்றே அச்யுதனின் அருகிலிருக்கிருர்கள். மேலும், இருவருமான சேர்த்தியே உத்தேச்யம். "தேவிமாராவர் திருமகள் பூமி ஏவ மற்றமரர் ஆட்செய்வார்" என்று நித்யஸூரிகளும் இவர்களுடைய சேர்த்தியில் ஏவினதை எடுத்துக் கைநீட்டுபவர்களென்று சொல்லப் பட்டிருக்கிறது. அவர்கள் ஏவலைக்கேட்பதே பரமானந்தமாகும். சேஷனை இளையபெருமாள் "க்ரியதாமிதி மாம் வத₃"[செய்யப்படட்டும் என்று என்னை ஆஜ்ஞாபிப்பாயாக.] என்று இதையே விரும்பிஞர். "ரமமாணு வநே த்ரய:" [மூவரும் வனத்தில் ரமித்தார்கள்,] என்று சொல்லப்பட்டபடி ஜீவன், எம்பெருமான், பிராட்டி என்னும் மூவர் களுடைய சேர்த்தியே பரஸ்பரம் ஆனந்தத்தைத் தருவதாகும். ஸீதா ராமர்களுக்குப் பரஸ்பர ஸம்ச்லேஷத்திஞலேற்படும் ஸந்தோஷம், இளையபெருமாளுக்கு (லக்ஷ்மணனுக்கு) இருவருமான சேர்த்தியை ஸேவிப்பதனுல் ஏற்பட்டதன்ரே. இங்கு பிராட்டிகளும் பகவானும் வெவ்வேறு தத்வங்கள் என்பதும் காட்டப்படுகிறது.

"ராமஸ்ய த₃க்ஷிணே பார்ச்வே பத்₃மா ஸ்ரீஸ்ஸமவஸ்த்தி₂தா
ஸவ்யே து ஹ்ரீர் விசாலாக்ஷீ"

[ராமனுடைய வலது புறத்தில் தாமரையாளாகிற ஸ்ரீதேவி இருந்தாள்; இடது புறத்தில் விசாலமான கண்களையுடைய பூதேவி இருந்தாள்.] என்னும் ஸ்ரீராமாயண வசனத்தாலும் "த₄ரணீதே₃வீ த₃க்ஷிணேதரக₃ா தத₂ா [பூமிதேவி இடது புறத்திலிருப்பவள்.] என் னும் பாத்மபுராண வசனத்திஞலும் இந்த மந்திரம் விவரிக்கப் பட்டது. இத்தால் "திருவில்லாத் தேவரைத் தேறேன்மின்தேவு" என்று திருமழிசையாழ்வாரால் சொல்லப்பட்டபடி, மற்ற தெய்வங்களிற் காட்டிலும், மாதவனின் மேன்மை உரைக்கப்பட்டது. மற்றிருந்தீர் கட்கறியலாகா மாதவனென்பதோர் அன்பஞகிய அச்யுதனுக்கு "தே₃வ்யா காருண்யரூபயா" என்று ப்ரஸித்தமடைந்த வேரி(வாஸனை) மாருத பூமேலிருப்பவளான ஸ்ரீதேவியும், மாதவியாகிய பூதேவியும் பத்னிகளாயிருந்துகொண்டு சேதனர்களை ஸ்ருஷ்டிக்கும்படியும்,

மோக்ஷத்தை அடையும்படியும் செய்கிறுர்கள். இம்மூவரும் சேர்ந்து கொண்டு ஒருவர்க்கொருவர் சேதனரிடம் அன்புகாட்டுவதில் போட்டி போடுகிறுர்கள்.

''தன்னடியார் திறத்தகத்துத் தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேல்
என்னடியார் அதுசெய்யார் செய்தாரேல் நன்று செய்தார் என்பர்போலும்''
என்று அருளிச்செய்தார் பெரியாழ்வாரும்.

இம்மாதிரியாக பகவானுக்கே ஸ்ரீ, பூமி, நீளை என்று மூன்று பத்னிகள் பரத்வாவஸ்தையிலும் இருப்பதாகச் சொல்லப்பட்டது. அவர் புத்ரனை பிரமனுக்கும் ஸரஸ்வதி, காயத்ரி, ஸாவித்ரி என்று மூன்று பத்னிகளிருப்பதாக அறிகிறோம். அவருடைய பெயரனுகிய ஸுப்ரஹ்மண்யனுக்கும் வள்ளி, தேவஸேனை என்று இரு பத்னிகளிருப்பதாகப் புராணங்களில் பேசப்பட்டிருக்கிறது. புருஷோத்தமனுடைய விபவாவதாரங்களிலும் க்ருஷ்ணுவதாரத்தில் அஷ்டமஹிகளுடனிருந்தது எல்லோரும் அறிந்ததே. யாஜ்ஞவல்க்யர் இரண்டுபத்னிகளையுடைவரென்பது வேதப்ரஸித்தம். வைஷ்ணவ ஆசார்யச்ரேஷ்டர்களான பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை என்னும் இம்மூவரும் இரண்டு பதனிகளை உடையவர்களென்று படித்திருக்கிறோம். இப்படி புண்ய பூமியாகிய பாரததேசத்தில் நாம் வணங்கும் தெய்வமும்; ரிஷிகளும், ஆசார்யர்களும் அனேக பத்னிகளை உடையவர்களாக இருந்திருக்கிறுர்கள். ஸ்ம்ருதிகளிலும் பலதாரங்களை மணம் செய்துகொள்ளப் புருஷர்களுக்கு அனுமதி கொடுத்திருக்கிறது. பலகோடிக் கணக்கான வருஷங்களாக இருந்துவரும் இவ்வழக்கத்தை கிறிஸ்தவ மதக் கொள்கையைக் காரணமாகக்கொண்ட ஐரோப்பியரின் அனுஷ்டானத்தைக்கொண்டு மாற்ற சட்டம் ஏற்படுத்தப் பார்க்கிறுர்கள். அப்படிச் செய்வது நமது நாட்டுக்கும் அதன் மக்களுக்கும் அதில் வழங்கிவரும் மதங்களுக்கும் பெருத்த தீங்காகும்.

(நக்ஷத்ராணிரூபம்) உம்முடைய திருவுருவம் நக்ஷத்ரங்கள் போல் அழகாயிருக்கிறது. ஆதித்யனைப்போன்ற ஒளியையுடையவன் என்று முன் சொன்னதில் த்ருப்தியில்லாமல் கணக்கற்ற நக்ஷத்ரங்களைப்போல் அழகியதாயிருக்கிறது உன் சோதியுருவம் என்று சொல்லப்படுகிறது. சங்கசக்ரங்கள், திவ்யாபரணங்கள், ஹிரண்யவர்ணையான பிராட்டி பீதாம்பரம் முதலியவைகளுடன் கூடிய திவ்யமங்கள விக்ரஹம் நக்ஷத்ரங்களுடன் கூடிய நீலமேகம்போல் விளங்குகிறதன்றோ.

"தாராரூபாணி த்₃ருச்யந்தே யாந்யேதாநி நப₄ஸ்ஸ்த₂லே
மம ரூபாணி தாந்யேவ"

[ஆகாயத்தில் காணப்படும் நக்ஷத்ரரூபங்களெல்லாம் என்னுடைய உருவங்களே.] என்று மஹாபாரதத்தில், ஆரண்யபர்வத்தில் பகவான் மார்க்கண்டேயரைக் குறித்துச் சொன்ன வசனத்தை அனுஸரித்து நக்ஷத்ரங்கள் பகவானுடைய சரீரங்களே என்றும் பொருள் கொள்ளலாம். (அச்விநௌ வ்யாத்தம்) அழகில் மிக்க உம்முடைய திருமுகமண்டலம் அச்வினீ தேவர்கள்போல் விளங்குகிறது. "அழகனே! காப்பிடவாராய்" என்ருர் பெரியாழ்வார். கண்டவர் தம் மனம் வழங்கும் அழகுடையவனன்றே இவன். அச்வினீதேவர்களைக்காட்டிலும் அழகிய உருவமுடையவர் லீலாவிபூதியில் இல்லாமையால் இவர்கள் உபமானமாகச் சொல்லப்பட்டனர். இவர்களும் பகவானுடைய திருமுகமண்டலத்திற்கு ஒப்பாகார்கள். பட்டரும் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில்

"விஹரதுமயி ரங்கி₃ணச்சூலிகாப்₄ரமரகதிலகோர்த்₄வபுண்ட்₃ரோஜ்ஜ்வலம்
முக₂மம்ருததடாகசந்த்₃ராம்பு₃ஜஸ்மர ஹரசுசி முக்₃த₄மந்த₃ஸ்மிதம்"

[திருமுடி, திருநெற்றியில் அலையும் திருக்குழல், திலகம், திருமண்காப்பு, இவற்ருல் பிரகாசிப்பதும், அம்ருததடாகம், சந்திரன், தாமரைப்பூ, இவற்றின் கர்வத்தைப் போக்கடிப்பதும், வெண்மையான, அழகிய புன்முறுவலை உடையதுமான ஸ்ரீரங்கநாதனுடைய முகம் என்னிடம் விஹாரம் செய்யக்கடவது.] என்று பகவானுடைய திருமுகத்தை ஒப்பற்றதாகவன்ருே பேசினுர்.

இதற்குமேல் வேதபுருஷன், இப்புருஷஸூக்தத்தை அனுஸந்தித்தவர்களுக்கு இஹலோக புருஷார்த்தங்களையும், பகவத்கைங்கர்யத்தையும் கொடுக்கும்படி புருஷோத்தமனைப் பிரார்த்திக்கிருன். இங்கு கைங்கர்யப்ரார்த்தனை செய்யப்படுகிறதென்பது கருணைக்கடலான பெரியவாச்சான்பிள்ளையால் பரந்தரஹஸ்யத்தில் அருளிச்செய்யப்பட்டது. (இஷ்டம் மநிஷாண) இவர்கள் விரும்பின எல்லாப் புருஷார்த்தங்களையும் கொடும். இதனுல் ப்ரயோஜனுந்தரபரராக மாட்டார்களோ என்ற ஸந்தேஹம் எழுகிறது. புருஷோத்தமனிடம் மற்ற பலன்களை நமக்காக விரும்பினுல் ப்ரயோஜனுந்தரபரராவோம். ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு இவ்வுலகிலுள்ள எல்லா ஸம்ருத்திகளும் உண்டாகவேண்டும் என்று பிரார்த்திப்பது தோஷமன்று. ஆழ்வார்களும் "நன்மக்களைப் பெற்று மகிழ்வரே" என்றும், "நல்ல பதத்தால் மனைவாழ்வர் கொண்ட பெண்டிர் மக்களே" என்றும்,

''விடுமால் வினை வேண்டிடில் மேலுலகும் எளிதாயிடும் அன்றி
இலங்கொளிசேர்
கொடுமாகடல் வையகம் ஆண்டு மதிக்குடை மன்னவராய் அடிகூடுவரே''
என்றும் அருளிச்செய்தனரன்றே.

(அமும் மநிஷாண) முன் மந்திரங்களில் சொல்லப்பட்ட கைங்கர்யம் 'அமும்' என்று காட்டப்படுகிறது. நித்யஸூரிகள் செய்யும் கைங்கர்யத்தையும் கொடும்; பரமபுருஷார்த்தமாகிற பகவதநுபவத்தைக் கொடுப்பீராக. பிராட்டியும் நீருமாயிருக்கிற சேர்த்தியில் அடிமையை அருளுவீராக. (ஸர்வம் மநிஷாண) எல்லாவற்றையும் கொடும். வேண்டிற்றெல்லாம் தருபவனன்றே தாமோதரன்.

''சாய்கொண்ட இம்மையும் சாதித்து வானவர் நாட்டையும்
நீ கண்டுகொள்ளென்று வீடும் தரும் நின்று நின்றே''
என்றார் நம்மாழ்வார்.

இந்த ருக்கில் அச்யுதனுடைய அன்பெனும் அவியாவிளக்கை ஸ்ரீபூமிகள் தூண்டுகிறார்களென்றும், புருஷோத்தமன் அன்புமயமானவனென்றும், சோதிவடிவானவனென்றும், அழகமர்சூழொளியனென்றும் சொல்லப்பட்டது.

''ஸர்வம் ஜக₃ந்மம ப₄வேதி₃தி ஸஞ்சிந்தயந் முநி:
த்₄யாயேத் புருஷஸூக்தேந ப்ரதிபாத்₃ய ஜநார்த்த₃நம்
விஷ்ணு: புருஷஸூக்தார்த்த₂ இதீயம் வைதி₃கீ ச்ருதி:
புருஷஸ்ய ஹரேஸ் ஸூக்தம் ஸர்வபாபப்ரணாசநம்''

['இவ்வுலகெல்லாம் எனக்காகட்டும்' என்று நினைத்துக்கொண்டு, முனியானவன், புருஷஸூக்தத்தினால் ஜநார்த்தனனைச் சொல்லி, தியானிக்கக்கடவன். விஷ்ணுவே புருஷஸூக்தத்தினால் சொல்லப்படுபவனென்று வேதத்தில் உரைக்கப்பட்டது. ஹரியாகிற புருஷனுடைய ஸூக்தம் எல்லாப் பாபங்களையும் போக்கடிப்பது.] என்று கார்க்கசௌநகமஹரிஷிகளால் புருஷஸூக்தம் நாராயணனைச் சொல்லுவதென்று உரைக்கப்பட்டது. போதாயனரும்,

''அதை₂நம் ருக்₃யஜுஸ்ஸாமபி₄ஸ் ஸ்துவந்தி த்₄ருவஸூக்தம் ஜபித்வா
புருஷஸூக்தம் ச அந்யாம்ச்ச வைஷ்ணவாந் மந்த்ராந்''

[இந்த நாராயணனை, த்ருவஸூக்தத்தையும், புருஷஸூக்தத்தையும் மற்ற வைஷ்ணவ மந்திரங்களையும் ஜபித்து, ருக்யஜுஸ்ஸாமவேதங்

களால் ஸ்தோத்ரம் செய்கிறார்கள்.] என்று விஷ்ணுவினுடைய ஆராதனத்தில் புருஷஸூக்தஜபம் செய்ய விதித்திருக்கிறார்.

''ஏஷா வைஷ்ணவீ நாமஸம்ஹிதா, ஏதாம் ப்ரயுஞ்ஜந் விஷ்ணும் ப்ரீணாதி''

[இது விஷ்ணுவினுடைய நாமஸம்ஹிதை; இதை ப்ரயோகிப்பவன் விஷ்ணுவை ப்ரீதியடையச் செய்கிறான்.] என்று ஸாமவிதிப்ராஹ்மணத்தில் சொல்லப்பட்டது. ஆதர்வணத்திலும், கோபதப்ராஹ்மணத்தில், ''வைஷ்ணவ்யா புருஷஸூக்தம்'' என்று உரைக்கப்பட்டது.

''புருஷஸ்ய ஹரேஸ்ஸூக்தம் ஸ்வர்க்$_3$யம் த$_4$ந்யம் யசஸ்கரம்...
ச்ருதிஷு ப்ரப$_3$லா மந்த்ராஸ் தேஷ்வப்யத்$_4$யாத்ம வாதி$_3$ந:
தத்ராபி பௌருஷம் ஸூக்தம் ந தஸ்மாத்$_3$ வித்$_3$யதே பரம்''

[புருஷனாகிய ஹரியின் ஸூக்தம் ஸ்வர்க்கத்தைத் தருவது; மேலானது; கீர்த்தியைக் கொடுப்பது. வேதங்களில் மந்த்ரங்கள் மேலானவை; அவைகளிலும் பரமாத்மாவைச் சொல்லுபவை சிறந்தவை. அவற்றிலும் புருஷஸூக்தம் பெருமைவாய்ந்தது. அதைக் காட்டிலும் மேலானதில்லை.] என்று சௌநக ஸ்ம்ருதியில் புருஷஸூக்தத்தின் பெருமை பேசப்பட்டது. வியாஸ ஸ்ம்ருதியிலும்,

''ந விஷ்ண்வாராத$_4$நாத் புண்யம் வித்$_3$யதே கர்ம வைதி$_3$கம்
தஸ்மாத$_3$நாதி$_3$ மத்$_4$யாந்தம் நித்யமாராத$_4$யேத் ஹரிம்
தத்$_3$ விஷ்ணோரிதி மந்த்ரேண ஸூக்தேந பௌருஷேண ச
நைதஸ்ய ஸத்$_3$ருசோ மந்த்ர: வேதே$_3$ஷூக்தச் சதுர்ஷ்வபி''

[விஷ்ணுவை ஆராதிப்பதைக்காட்டிலும் புண்யமான வைதிககர்மம் கிடையாது. ஆகையால் ''தத்$_3$ விஷ்ணோ: பரமம் பத$_3$ம்'' என்னும் மந்திரத்தாலும், புருஷஸூக்தத்தாலும், ஆதிமத்யாந்தமில்லாத ஹரியை தினந்தோறும் ஆராதிக்கக்கடவன். இதற்கு ஸமானமான மந்திரம் நான்கு வேதங்களிலும் சொல்லப்படவில்லை.] என்று உத்கோஷிக்கப்பட்டது. விஷ்ணு ஸ்ம்ருதியிலும், ''வாஸுதே$_3$வம் ஸமர்ச்சயேத்'' [வாஸுதேவனை அர்ச்சனை செய்யவேண்டியது.] என்று ஆரம்பித்து ''ஏவமப்$_4$யர்ச்ய து ஜபேத் ஸூக்தம் வை பௌருஷம் தத:'' [இம்மாதிரி ஆராதித்து புருஷஸூக்தத்தை ஜபிக்கவேண்டியது.] என்று சொல்லப்பட்டது. வாதூல ஸூத்ரத்தில். ''யத்ர யத்ர கர்மப்ரேஷோ ஜாயதே தத்ர தத்ர புருஷம் த்$_4$யாயந் புருஷஸூக்தம் ஜபேத$_3$ர்ச்சயேத் பூர்ணத்வாத் புருஷ:'' [கர்மப்ரம்சம் உண்டாகும்போது, புருஷனை தியானித்து,

புருஷஸூக்தத்தை ஜபித்து ஆராதிக்கவேண்டியது; பூர்ணனுகை யால் புருஷனெனப்படுகிறுன்.] என்று புருஷஸூக்தத்தின் சிறப்பு சொல்லப்பட்டது. இம்மாதிரியாகப் பல்லாயிரக்கணக்கான இடங் களில் புருஷஸூக்தத்தில் ப்ரதிபாதிக்கப்படுமவன் நாராயணனே என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதிஹாஸபுராணங்களிலும் பல பலவிடங்களில் இது பகவத்பரமென்று பேசப்பட்டிருக்கிறது. ஸார மான சிலவற்றை எடுத்துக் காட்டுவோம். மஹாபாரதத்தில், மோக்ஷதர்மத்தில்,

"ப₃ஹவ: புருஷா ராஜந் உதாஹோ ஏக ஏவது।
கோஹ்யத்ர புருஷ: ச்ரேஷ்ட்ட₂: கோ வா யோநிரிஹோச்யதே॥"

[ப்ராஹ்மணரே! புருஷர்கள் பலரா? அல்லது ஒருவனு? (பலராஞல்) இவர்களுள் எந்தப் புருஷன் மேலானவன்? எவன் மற்றவர்களுக்கு காரணமாயிருப்பவன்?] என்று ஜனமேஜயர் வைசம்பாயனரை வினவி ஞர். வைசம்பாயனரும் தாம் சொல்லப்போகும் விஷயம் அதிரஹஸ்ய மானதாகையால் தன் குருவான வியாஸரை நமஸ்கரித்து,

"ப₃ஹவ: புருஷா ராஜந் ஸாங்க்₂யயோகவிசாரிணும்।
நைததி₃ச்ச₂ந்தி புருஷம் ஏகம் குருகுலோத்₃வஹ॥
ப₃ஹூநாம் புருஷாணுஞ்ச யதை₂கோ யோநிருச்யதே।
தத₂ா தம் புருஷவ்யாக்₄ரம் வ்யாக்₂யாஸ்யாமி கு₃ணுதி₄கம்॥
இத₃ம் புருஷஸூக்தம் ஹி ஸர்வவேதே₃ஷு பார்த்தி₂வ।
ருதம் ஸத்யம் ச விக்₂யாதம் ருஷிஸிம்ஹேந சிந்திதம்॥"

[குருகுலச்ரேஷ்ட்டனை அரசனே! ஞானிகளும் யோகிகளும் புருஷர் கள் பலரேன்ற நிர்ணயித்திருக்கிருர்கள். ஒருபுருஷன் என்பதை அவர்கள் அங்கீகரிக்கமாட்டார்கள். பல புருஷர்களுக்கும் காரண மானவனும், குணங்களில் சிறந்தவனுமான புருஷச்ரேஷ்டனைச் சொல்லுகிறேன். ரிஷிச்ரேஷ்ட்டரால் ஸாக்ஷாத்கரிக்கப்பட்ட இந்தப் புருஷஸூக்தம் எல்லா வேதங்களிலும் உண்மையை உணர்த்துவது என்று கீர்த்திபெற்றிருக்கிறது.] என்று அத்வைதநிரஸனம் செய்து புருஷஸூக்தமே காரண புருஷனைக் கூறுகிறது என்று உரைத்து, புருஷோத்தமன் யாரென்பதை நிர்ணயம் செய்ய ப்ரஹ்மாவுக்கும் ருத்ரனுக்கும் நடந்ததான பின்வரும் ஸம்பாஷணையைச் சொன்னுர்:-

முன் ஒரு காலத்தில், பாற்கடலின் நடுவிலுள்ள வைஜயந்த மென்னும் பர்வதத்தில் பிரமன் தவம் செய்து கொண்டிருக்கும்

போது, சிவபிரான், தன் தகப்பனை பிரமனை அடிபணிந்து பல புருஷர்களை ஸ்ருஷ்டிசெய்யும் நீர் எந்தப்புருஷனை தியானிக்கிறீர்? என்று கேட்டார். அதற்கு பிரமன்

''ச்ருணு புத்ர யத$_{2}$ா ஹ்யேஷ புருஷ: சாச்வதோவ்யய:...
ந ஸ ஶக்யஸ் த்வயா த்$_{3}$ரஷ்டும் மயாந்யைர்வாபி ஸத்தம...
மமாந்தராத்மா தவ ச யேசாந்யே தே$_{3}$ஹிஸம்ஜ்ஞிதா:...
விச்வமூர்த்த$_{4}$ா விச்வபு$_{4}$ஜ: விச்வபாத$_{3}$ாக்ஷிநாஸிக:...
மஹாபுருஷசப்$_{3}$த$_{3}$ம் ஸ பி$_{3}$ப$_{4}$ர்த்யேகஸ் ஸநாதந:...
ஸஹி நாராயணோ ஜ்ஞேய: ஸர்வாத்மா புருஷோ ஹி ஸ:''

[குழந்தாய்! நித்யனனவனும், அழிவற்றவனுமான புருஷனைப்பற்றிக் கேட்பாயாக. அவனை உன்னுலும், என்னுலும், எவராலும் காண முடியாது. அவன் உனக்கும் எனக்கும், எல்லோருக்கும் அந்தர் யாமி. அவன் முடிகளாயிரம், அடிகளாயிரம், கைகளாயிரம், கண் களாயிரமுடையவன். பழைமையான அவனே மஹாபுருஷசப்தத்தை வஹிக்கிருன். அவனை நாராயணனென்று அறிவாயாக; ஸர்வாந்தர் யாமியான அவனன்ருே புருஷன்.] என்று புருஷஸூக்தத்தால் சொல்லப்படுபவன் பரமாத்மாவான நாராயணனே என்று தெளி வாகத்தெரிவித்தார். விஷ்ணுபுராணத்தில் துருவன் இவ்விஷயத்தை விளக்கினுன். மேலும், ஹரிவம்சத்தில் கைலாஸயாத்ரையின்போது ருத்ரன், உமையுடன் கூடியிருந்து கைகூப்பி, பகவானைக்குறித்து,

''ஸஹஸ்ரசீர்ஷா புருஷஸ் ஸஹஸ்ராக்ஷஸ் ஸஹஸ்ரபாத்
ஸஹஸ்ரோத$_{3}$ரப$_{3}$ாஹூச்ச ஸஹஸ்ராத்மா தி$_{3}$வஸ்பதி:....''

முதலிய ச்லோகங்களால் ஸ்தோத்ரம் செய்ததாலும் புருஷஸூக்தம் பேசநின்ற சிவனுக்கு நாயகனை நாராயணனையே சொல்லுகிற தென்று ஸித்திக்கிறது. மோக்ஷதர்மத்தில் முப்பத்துமூன்ருவது அத்யாயத்தில் பீஷ்மரை யுதிஷ்டிரன்

''நாராயணம் ஹ்ருஷீகேசம் கே$_{3}$ாவிந்த$_{3}$மபராஜிதம்
தத்வேந ப$_{4}$ரதச்ரேஷ்ட$_{2}$ ச்ரோதுமிச்ச$_{2}$ாமி கேசவம்''

[பரதகுலத்தில் பிறந்தவருள் சிறந்தவரே! ஜயிக்கப்படாதவனும், கோவிந்தன், ஹ்ருஷீகேசன், கேசவன் என்னும் பெயர்களையுடைய வனுமான நாராயணனை உண்மையாக அறியவிரும்புகிறேன்.] என்று கேட்க,

''கேசவோ ப₄ரதச்ரேஷ்ட₂ ப₄க₃வாநீச்வர: ப்ரபு₄:
புருஷஸ் ஸர்வமித்யேவ ச்ரூயதே ப₃ஹுதா₄ விபு₄:
ப்₃ராஹ்மணாநாம் சதம் ஜ்யேஷ்ட₂ம் முகா₂த₃ஸ்யாஸ்ருஜத்ப்ரபு₄:''

[பரதச்ரேஷ்டனே! ப்ரபுவும், பகவானுமான கேசவனே ஸர்வேச்வரன். ஸர்வவ்யாபியான அந்தப் புருஷனே எல்லாமென்று பல விதமாகச் சொல்லப்படுகிறான். ப்ரபுவான இவனே முகத்திலிருந்து உயர்ந்தவர்களான நூறு ப்ராஹ்மணர்களை ஸ்ருஷ்டித்தான்.] முதலிய ச்லோகங்களாலும் இவ்விஷயம் நன்கு விளக்கப்பட்டது. ராமாயணத்திலும், பாகவதத்திலும், கீதையிலும், மற்ற புராணங்களிலும் புருஷஸூக்தம் நாராயணனையே பரமாத்மாவென்று உத்கோஷிக்கிறதென்பது சொல்லப்பட்டது. இதைப் பன்னியுரைக்குங் கால் பாரதமாம். ஆதலால் இத்துடன் நிறுத்திக்கொள்கிறோம்.

கூரத்தாழ்வான் ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில்,

''யம் பூ₄தப₄வ்யப₄வதீ₃சமநீசமாஹு: அந்தஸ்ஸமுத்₃ரநிலயம் யமநந்தரூபம்
யஸ்ய த்ரிலோகஜநநீ மஹிஷீ ச லக்ஷ்மீ: ஸாக்ஷாத் ஸ ஏவ புருஷோஸி ஸஹஸ்ர மூர்த்தா₄
ஸர்வச்ருதிஷ்வநுக₃தம் ஸ்தி₂ரமப்ரகம்ப்யம் நாராயணாஹ்வயத₄ரம் த்வமிவாநவத்₃யம்
ஸூக்தம் து பௌருஷமசேஷஜக₃த்பவித்ரம் த்வாமுத்தமம் புருஷமீச முதா₃ஜஹார''

[முக்காலங்களிலுள்ளவற்றிற்கு ஈசனென்றும், தனக்கொரு ஈசனில்லாதவனென்றும், பாற்கடலில் பள்ளிகொண்டவனென்றும், அபரிமிதமான அவதாரரூபங்களையுடையவனென்றும், மூவுலகிற்கும் தாயாகிய லக்ஷ்மியைப் பத்னியாகவுடையவனென்றும் சொல்லப்பட்ட நீயே ஆயிரம் தலையையுடைய புருஷனாகிறாய். உன்னைப் போல், எல்லா ச்ருதிகளிலும் உத்கோஷிக்கப்பட்டதும், நிலையானதும், அசைக்கமுடியாததும், 'நாராயணம்' என்ற பெயரையுடையதும், குற்றமற்றதும், உலகையெல்லாம் புனிதமடையச்செய்வதுமான புருஷஸூக்தம், உன்னையே மேலான புருஷனாகவும், ஈச்வரனாகவும் சொல்லிற்று.] என்று புருஷஸூக்தத்தின் பெருமையையும், பொருளையும் ஸங்க்ரஹித்தார். பெரியவாச்சான்பிள்ளையும் திருவாய்மொழி வியாக்யானத்தின் கடைசியில் ''ஸ்ரீமானான நாராயணனே ப்ராப்யமும் ப்ராபகமும் என்று இவர்க்குப் பக்ஷமென்னுமிடம் தோற்றிற்று. இவ்வர்த்தம் உபநிஷத் ப்ரஸித்தமும்; அநந்யபரமான நாராயணாநுவாகத்திலே, நாராயணசப்தத்தாலே ஸர்வாதி₄

களைச்சொல்லி, ''ஹ்ரீச்ச தே லக்ஷ்மீச்ச பத்ந்யௌ'' என்று உத்தர நாராயணத்தே சொல்லிற்று'' என்று அருளிச்செய்தார்.

இந்தப் புருஷஸூக்தத்தில், ஸ்ரீபூமிநாதனை நாராயணனே பராத்பரனென்றும், அவனே நான்முகனைப் படைத்தானென்றும், அவனே ஸர்வகாரண பூதனென்றும், ஸர்வாந்தர்யாமியென்றும், லோகஸம்ரக்ஷணார்த்தம் பல அவதாரங்களைச் செய்தானென்றும், நித்யவிபூதிநாயகனென்றும் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. புருஷ ஸூக்தம் என்னும் பெயரிலிருந்தே ஸ்தோதாவாகிய ஜீவாத்மா உண்டென்றும், ஸ்தவப்ரியனாகிய மஹாபுருஷன் உண்டென்றும், ஸ்தோத்ரமும் உண்மையென்றும் உணர்த்தப்படுகிறது. ஜ்ஞாதா, ஜ்ஞேயம், ஜ்ஞானம் என்னும் மூன்று இல்லை என்று சொல்லும் அத்வைதவாதம் இங்கு ஒப்புக்கொள்ளப்படவில்லை. உலகம் பொய் யென்கிற ப்ரமவாதத்திற்கு, இங்கு விவரமாகச் சொல்லப்பட்ட ஸ்ருஷ்டி க்ரமத்தில் இடமுண்டோ? பரமபுருஷனுக்கு ஆயிரம் கண் கள், ஆயிரம் தலைகள் என்றும், ஆதித்யவர்ணமானவனென்றும், நக்ஷத்ரங்கள்போல் உருவமுடையவனென்றும், அச்விநீதேவர்கள் போல் அழகானவனென்றும் சொல்லப்பட்டதால் ரூபமில்லை என்னும் வாதம் வீண்வாதமென்று விளங்குகிறது. சேதனர்கள், நித்யர், முக்தர், பத்தர் என்று மூன்றுவிதமானவர்களென்றும், மோக்ஷத்தைக் கொடுப்பவன் முகுந்தவனே என்றும் காட்டப்படுகிறது. காலமும் வருங்காலம், நிகழ்காலம், கழிகாலம் என்னும் மூன்று பேதத்தை உடையதென்று தெரிகிறது. புருஷோத்தமனுடைய மஹிமை வாக்குக் கும் மனத்திற்கும் எட்டாததென்று அறிவிக்கப்படுகிறது. புருஷோத்த மன் ஸமஸ்தகல்யாணகுணங்கள் நிறைந்தவனென்றும், ஹேய குணம் சிறிதும் இல்லாதவனென்றும், ஸுலபமாக ஆராதிக்கத் தக்கவனென்றும் உத்கோஷிக்கப்பட்டதிலிருந்து குணமில்லை என் னும் கட்சிக்குக் கொஞ்சமும் இடமில்லை. ப்ரக்ருதிக்கு அப்பாற் பட்டதும், ''விஷ்ணோர் யத் பரமம் பதம்'' என்று சொல்லப்பட்டது மான ஸ்தானவிசேஷம் இருக்கிறதென்றும், அதை அடைவதே மோக்ஷமென்றும் விரித்துரைக்கப்பட்டிருக்கிறது. பகவத் கைங்கர் யமே பரமபுருஷார்த்தமென்றும் அதுவும் இருவருமான சேர்த்தியில் செய்யப்படவேண்டும் என்றும் சொல்லும் ஸ்ரீவைஷ்ணவஸித்தாந் தம் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. விசிஷ்டாத்வைதமே வேதாந் தத்தின் விழுப்பொருள் என்னும் ஸித்தாந்தம் ஸ்தாபிக்கப்பட்டது.

**ஸ்ரீ உ. வே. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி இயற்றிய**
**புருஷஸூக்த வ்யாக்யானம் முற்றிற்று.**

ஸ்ரீ:

# ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்

| சிறந்த ஸ்ரீவைஷ்ணவ மாதப்பத்திரிகை | சுபகிருது மார்கழியிலிருந்து பதிநாலாவது வருடம் நடைபெறுகிறது. |
|---|---|

ஆசிரியர்:—

**ஸ்ரீ S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,**

அட்வகேட்,

3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.

**வருடச்சந்தா ரூ. 3-00.**

'ராமாயண தனிச்லோகம்' 'பகவத்கீதா வ்யாக்யானம்' முதலான பல நூல்கள் இந்த மாதப்பத்திரிகையில் வெளி வருகின்றன. இப்பத்திரிகையில். உபநிஷத்துக்கள். ப்ரஹ்ம ஸூத்ரங்கள் முதலானவற்றுக்கு விரிவுரைகளும், திவ்ய ப்ரபந்தங்களுக்கு எளிய வ்யாக்யானங்களும் மற்றும் பல பகவத் விஷயங்களும் வெளிவருகின்றன. வருடச்சந்தா ரூபாய் மூன்று. [3] நீங்கள் சந்தாதாரர்களாகச் சேர்ந்து விட்டீர்களா? இல்லையேல் இன்றே சேருங்கள்.

## ஸ்ரீஸூக்திமாலா வெளியீடுகள்

பதவுரை, அரும்பதவுரை, ப்ரமாணத்திரட்டு முதலானவற்றோடு கூடிய பெரியவாச்சான்பிள்ளை முதலான பூர்வாசார்யர்களின் க்ரந்தங்கள்

| க்ரந்தங்கள் | விலை | தபால் |
|---|---|---|
| 1. பரந்த ரஹஸ்யம் முதலிய எட்டு ரஹஸ்யங்கள் | 1-50 | -18 |
| 2. ஸ்தோத்ரரத்ந சது:ச்லோகீ ஜிதந்தே வ்யாக்யானங்கள் | 3-00 | -38 |
| 3. திருப்பல்லாண்டு வ்யாக்யானம் | 1-50 | -18 |
| 4. முதல் திருவந்தாதி வ்யாக்யானம் | 1-88 | -25 |
| 5. பெருமாள் திருமொழி வ்யாக்யானம் | 1-88 | -25 |
| 6. திருமாலை வ்யாக்யானம் | 2-75 | -31 |
| 7. திருவாசிரியம் பெரியதிருவந்தாதி வ்யாக்யானம் | 1-63 | -25 |
| 8. சது:ச்லோகீ வ்யாக்யானம் (நாயனாராச்சான்பிள்ளை) | 1-50 | -18 |
| 9. கத்ய வ்யாக்யானங்கள் | 2-00 | -25 |
| 10. நாச்சியார்திருமொழி வ்யாக்யானம் | 4-00 | -50 |
| 11. திருச்சந்தவிருத்த வ்யாக்யானம் | 3-00 | -38 |
| 12. நான்முகன்திருவந்தாதி வ்யாக்யானம் (விவரணத்துடன்) | 2-50 | -38 |
| ஷை மலிவுப்பதிப்பு | 2-00 | -38 |
| 13. ஸ்ரீராமாயண தனிச்லோகம்(விவரணத்துடன்) I Part. | 3-50 | -38 |
| ஷை இரண்டாம்பாகம் (விவரணத்துடன்) | 7-00 | -75 |
| 14. திருப்பள்ளியெழுச்சி வ்யாக்யானம் | 0-50 | -08 |
| 15. பாசுரப்படி ராமாயணம் (விலையில்லை தபால்கூலி 0-08) | | |
| 16. அமலனாதிபிரான் வ்யாக்யானங்கள் | 1-88 | -25 |
| 17. கண்ணிநுண்சிறுத்தாம்பு வ்யாக்யானம் | 2-75 | -38 |
| 18. சிறியதிருமடல் வ்யாக்யானம் (விவரணத்துடன்) | 1-38 | -25 |
| 19. முமுக்ஷுப்படி வ்யாக்யானம் | 2-50 | -37 |
| 20. பெரியதிருமடல் வ்யாக்யானம் (விவரணத்துடன்) | 1-50 | -25 |

## ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| 1. திருப்பாவை வ்யாக்யானம் | 3-00 | -37 |
| 2. ஸந்த்யாவந்தந பாஷ்யம் | 2-25 | -25 |
| 3. புருஷஸூக்த வ்யாக்யானம் | 0-75 | -25 |
| 4. நாராயணஸூக்த வ்யாக்யானம் (அச்சில்) | 0-75 | -25 |
| 5. ஸ்ரீஸூக்த வ்யாக்யானம் | 1-50 | -25 |
| 6. பூ நீளா விஷ்ணுஸூக்த வ்யாக்யானங்கள் | 1-75 | -25 |
| 7. தேஹளீச ஸுப்ரபாதம் | 0-25 | -08 |
| 8. கம்பராமாயணம் (கையடைப்படலம் முடிய) | 2-50 | -38 |
| 9. ராமாநுஜதேசிக ஸ்தோத்ரங்கள் | 1-00 | -18 |
| 10. ஸாத்விகவிஜயஸர்வஸ்வம் | 0-25 | |
| 11. பாகவத தசமஸ்கந்த கீர்த்தனை பூர்வபாகம் | 4-00 | 1-00 |
| ஷை உத்தரபாகம் | 4-00 | 1-00 |
| 12. ஸ்ரீகேசவ மணிமாலை | 0-50 | -08 |
| 13. ஸ்ரீலக்ஷ்மீ ந்ருஸிம்ஹஸ்தவம் | 0-37 | -08 |
| 14. யதிராஜவிம்சதி வ்யாக்யானம் | 0-88 | -12 |
| 15. ஸந்மதகாரிகாவளீ | 1-75 | -25 |
| 16. விஷ்ணுசித்தவிஜயம் முதல் பாகம் (அச்சில்) | 5-00 | -75 |
| ஷை இரண்டாம்பாகம் | 7-00 | 1-00 |
| 17. முதல் திருவந்தாதி, அப்பிள்ளையுரை, (விவரணம்) | 3-00 | -38 |

கிடைக்குமிடம்:— S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், அட்வகேட்,
3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.